| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (௱௬௰) ——— *சும்மைகுவால்போர். | போரின்பெயர். சும்மை-குவால். ஆ உ. |
| (௱௬௧) சூ அரியே தண்டு லமரிசியாகு[ம். | அரிசியின்பெயர். அரி-தண்டுலம். ஆ உ. |
| (௱௬௨) சூ. இயவைதோரையெனும்வேயரிசி. | வேயரிசியின்பெயர். இயவை-தோரை. ஆ உ. |
| (௱௬௩) சூ. சொன்னலுமிறுங்குஞ் சோளமாகும். | சோளத்தின்பெயர். சொன்னல்-இறுங்கு. ஆ உ. |
| (௱௬௪) சூ. இறடிகருந்தினை. | கருந்தினையின்பெயர். இறடி. (௧) |
| (௱௬௫) சூ. ஏனல்செந்தினை. | செந்தினையின்பெயர். ஏனல். (௧) |
| (௱௬௬) சூ. *மாடமுழுந்தே. | உழுந்தின்பெயர். மாடம். (௧) |
| (௱௬௭) சூ. *ஆடகந்துவரை. | துவரையின்பெயர். ஆடகம். (௧) |
| (௱௬௮) சூ. *கூலமிதைகாராமணிக்கூற்றும். | காராமணியின்பெயர். கூலம்-இதை. ஆ உ. |
| (௱௬௯) சூ. *மஞ்சூரங்கடலை. | கடலையின்பெயர். மஞ்சூரம். (௧) |
| (௱௭௰) சூ. *முற்கம்பயறே. | பயற்றின்பெயர். முற்கம். (௧) |
| (௱௭௧) சூ. *கவலைபுல்செந்தினை கம்பாகும்மே. | கம்பின்பெயர். கவலை-புல்-செந்தினை. ஆ ௩. |
| (௱௭௨) சூ. *கோதிகோதுமை. | கோதுமையின்பெயர். கோதி. (௧) |
| (௱௭௩) சூ. *குளுத்தங்காணங்கொள்ளாகும்மே. வ | கொள்ளின்பெயர். குளுத்தம்-காணம். ஆ உ. வ |

சூத்திரம்.

(௱எச) ——

*வரகுகோத்திரவம்.

(௱எரு) சூ.

முதிரை யவரை துவரை முதலாயின.

(௱எசு) சூ.

பரல்காழ்வீசம்வித்துவிதையாம்.

(௱எஎ) சூ

எண்ணுந்திலமுமெள்ளென விசைப்பர்.

(௱எஅ) சூ.

கவ்வையெள்ளிளங்காயாகும்மே.

(௱எகூ) சூ.

சூல்கதிராகும்.

(௱அ0) சூ.

பதடிபதரே.

(௱அக) சூ.

இருவியுமருவியுந்திணைத்தாளாகும்.

(௱அஉ) சூ.

வையேபலாலம்வைக்கோலாகும்.

(௱அங) சூ.

வழுது மொரோவழியையும் பெறுமே.

(௱அச) சூ.

பொங்கழிதூற்றுநெற்கூடாகும்.

(௱அரு) சூ.

பயிரேபசும்புல் பைங்கூழாகும்.

ரு

பெயர்ப்பிரிவு.

வரகின்பெயர்.

கோத்திரவம். (க)

அவரைதுவரைமுதலாயினவற்றின்பெயர்.

முதிரை. (க)

விதையின்பெயர்.

பரல்-காழ்-வீசம்- வித்து. ஆகூ ச.

எள்ளின்பெயர்.

எண்-திலம். ஆகூ உ.

எள்ளிளங்காயின்பெயர்.

கவ்வை. (க)

கதிரின்பெயர்.

சூல். (க)

பதரின்பெயர்.

பதடி. (க)

திணைத்தாளின்பெயர்.

இருவி-அருவி. ஆகூ உ.

வைக்கோலின்பெயர்.

வை-பலாலம். உ.

மற்றும்வைக்கோலின்பெயர்.

வழுது. (க)

ஆகூ ங.

தூற்றுநெற்கூட்டின் பெயர்.

பொங்கழி. (க)

பயிரின்பெயர்.

பசும்புல்-பைங்கூழ். ஆகூ உ.

ரு

சூத்திரம்.

(௱௮௬) ——
புதல்புல்லெனவருபுற்பிறப் பாகும்.

(௱௮௭) சூ.
*பதமுந் தூர்வையும் பச்சறுகாகும்.

(௱௮௮) சூ.
*சட்பமிளம்புல்.

(௱௮௯) சூ.
நாரிநெய்யரி தெங்கிணர்ப் பாளை.

(௱௯௰) சூ.
மூலங் கந்தங் கிழங் கென மொழிப.

(௱௯௧) சூ.
இலதையெனும்பெயர்கோற்கொடிக்கெய்தும்.

(௱௯௨) சூ.
கோற் கொடி மென் கொடி கொடியின்பிறப்பே.

(௱௯௩) சூ.
கற்பகஞ்சேர் கொடி காமவல்லி.

(௱௯௪) சூ.
வல்லியுநூழிலும் வள்ளியுங் கொடியே.

(௱௯௫) சூ.
மல்லிகைமௌவல்.

(௱௯௬) சூ.
மயிலையிருவாட்சி.

(௱௯௭) சூ.
மௌவலுந் தளவமுங் கற்பு முல்லை.

பி

பெயர்ப்பிரிவு.

புற்பிறப்பின்பெயர்.
புதல்-புல். ஆ ௨.

பச்சறுகின்பெயர்.
பதம்-தூர்வை. ஆ ௨.

இளம்புல்லின்பெயர்.
சட்பம். (௧)

தெங்கிணர்ப்பாளையின்பெயர்.
நாரி-நெய்யரி. ஆ ௨.

கிழங்கின்பெயர்.
மூலம்-கந்தம். ஆ ௨.

கோற்கொடியின்பெயர்.
இலதை. (௧)

கொடிப்பிறப்பின்பெயர்.
கோற்கொடி-மென்கொடி. ஆ ௨.

கற்பகஞ்சேர்கொடியின் பெயர்.
காமவல்லி. (௧)

கொடியின்பெயர்.
வல்லி-நூழில்-வள்ளி. ஆ ௩.

மல்லிகையின்பெயர்.
மௌவல். (௧)

இருவாட்சியின்பெயர்.
மயிலை. (௧)

முல்லையின்பெயர்.
மௌவல்-தளவம்-கற்பு. ஆ ௩.

பி

சூத்திரம்.

(௱௯௮)

பித்திகைசாதி கருமுகையும்
ன்று, மொத்தசிறு சண்பகமா
கும்மே.

(௱௯௯) சூ.

மாலதிமௌவலாகுமென்ப.

(௨௱) சூ.

மாலதிசிறுசண்பகமு மாகு
[ம்.

(௨௱௧) சூ.

*தமநகமருக்கொழுந்து.

(௨௱௨) சூ.

துடிகூதாளங் கூதாளியென்
[ப.

(௨௱௩) சூ.

விம்பமுந்தொண்டையுங்
கொவ்வைப்பெயரே.

(௨௱௪) சூ.

*வள்ளைநாளிகம்.

(௨௱௫) சூ.

*கன்னிகிகிணிகருவிளைகாக்
கணம்.

(௨௱௬) சூ.

*மதூசங்கோத்தநிகைமுந்
திரிகையாகும்.

(௨௱௭) சூ.

*குளவிமலைப்பச்சை.

(௨௱௮) சூ.

குண்டலிமுத்தாபலமிசங்கெ
னக்கூறுவர்.

(௨௱௯) சூ.

*சடைதூர்சிவைவேர்.

அ

பெயர்ப்பிரிவு.

சிறுசண்பகத்தின்பெயர்.
பித்திகை-சாதி- கருமுகை.
ஆ ௩.

மௌவலின்பெயர்.
மாலதி. (௧)
மாலதியென்னும்பெயர்.
சிறுசண்பகத்திற்குமுரித்து.

மருக்கொழுந்தின்பெயர்.
தமநகம். (௧)

கூதாளியின்பெயர்.
துடி-கூதாளம். ஆ ௨.

கொவ்வையின்பெயர்.
விம்பம்-தொண்டை. ஆ ௨.

வள்ளையின்பெயர்.
நாளிகம். (௧)

காக்கணத்தின்பெயர்.
கன்னி-கிகிணி-கருவிளை.
ஆ ௩.

முந்திரிகையின்பெயர்.
மதூசம்-கோத்தநிகை.
ஆ ௨.

மலைப்பச்சையின்பெயர்.
குளவி. (௧)

இசங்கின்பெயர்.
குண்டலி-முத்தாபலம்.
ஆ ௨.

வேரின்பெயர்.
சடை-தூர்-சிவை. ஆ ௩.

அ

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (உ௱௰) —— அடம்புசோபாலிகை. | அடம்பின்பெயர். சோபாலிகை. (க) |
| (உ௱கக) சூ. அதிரல்விரிதூறு. | விரிதூற்றின்பெயர். அதிரல். (க) |
| (உ௱கஉ) சூ. பிராம்பிரக்கு. | பிரக்கின்பெயர். பிராம். (க) |
| (உ௱கந) சூ. *பெரும்பிரக்குப்படலிகை. | பெரும்பிரக்கின்பெயர். படலிகை. (க) |
| (உ௱கச) சூ. கூலம்பாகல். | பாகலின்பெயர். கூலம். (க) |
| (உ௱கரு) சூ. சிவேதைபகன்றை. | சிவேதையின்பெயர். பகன்றை. (க) |
| (உ௱கசு) சூ. அமுதவல்லிசீந்தில். | சீந்திலின்பெயர். அமுதவல்லி. (க) |
| (உ௱கஎ) சூ. கண்டூரங்காஞ்சொறி. | காஞ்சொறியின்பெயர். கண்டூரம். (க) |
| (உ௱கஅ) சூ. பஞ்சிகந்தாளி. | தாளியின்பெயர். பஞ்சிகம். (க) |
| (உ௱கக) சூ. பகன்றைநறையாலென்னவும்பகர்வர். | நறையாலின்பெயர். பகன்றை. (க) |
| (உ௱உ௰) சூ. நாகவல்லிதாம்பூலம்வெற்றிலை. | வெற்றிலையின்பெயர். நாகவல்லி - தாம்பூலம். ஆஉ. |
| (உ௱உக) சூ. வச்சிரவல்லிபிரண்டையாகும். | பிரண்டையின்பெயர். வச்சிரவல்லி. (க) |
| (உ௱உஉ) சூ. நீலியவுரி. | அவுரியின்பெயர். நீலி. (க) |
| (உ௱உந) சூ. குறிஞ்சிசகசரி. | குறிஞ்சியின்பெயர். சகசரி. (க) |
| (உ௱உச) சூ. துரோணந்தும்பையாகச்சொல்லுவர். | தும்பையின்பெயர். துரோணம். (க) |

சூ    சூ

சூத்திரம்.

(உஉ௫) ——
குசையேதருப்பையென்ன
க்கூறுவர்.

(உஉ௬) சூ.
ஏருவைபஞ்சாய்க்கோரையெ
ன்ப.

(உஉ௭) சூ.
செருந்திவாட்கோரை.

(உஉ௮) சூ.
காசைநாணல்.

(உஉ௯) சூ.
*விரணம்விழற்புல்.

(உ௩0) சூ.
புற்கொடி மென்பூச் சுரை
யெனப்புகல்வர்.

(உ௩௧) சூ.
நீர்முள்ளிமுண்டகமாகு மெ
ன்ப.

(உ௩உ) சூ.
நாரஞ்செவிரம் பதிகஞ்சை
வலம், பாசியென்றுபகரப்படு
மே.

(உ௩௩) சூ.
கல்கார நீர்க்குளிரியென்ப.

(உ௩௪) சூ.
புண்டரீகம் பதும நளிநஞ்
சரோருக,முண்டகமம்போரு
கமரவிந்தம், பங்கயமம்புயம்
வாரிசஞ்சலசங், கஞ்சம்வநசங்
கோகநதங்கமல, முளரிநீரோ
ருகந்திருமால்கொப்பூழ், திரு
மலரிண்டை சதபத்திரியென,
வருபவைதாமரைவண்பெயரா
கும்.

பெயர்ப்பிரிவு.

தருப்பையின்பெயர்.
குசை. (௧)

பஞ்சாய்க்கோரையின்பெயர்.
ஏருவை. (௧)

வாட்கோரையின்பெயர்.
செருந்தி. (௧)

நாணலின்பெயர்.
காசை. (௧)

விழற்புல்லின்பெயர்.
விரணம். (௧)

சுரையின்பெயர்.
புற்கொடி. (௧)

நீர்முள்ளியின்பெயர்.
முண்டகம். (௧)

பாசியின்பெயர்.
நாரம்- செவிரம் - பதிகம்-
சைவலம். ஆ௪.

நீர்க்குளிரியின்பெயர்.
கல்காரம். (௧)

தாமரையின்பெயர்.
புண்டரீகம்-பதுமம்-நளிந
ம்-சரோருகம்-முண்டகம்-அ
ம்போருகம்-அரவிந்தம்-பங்
கயம்-அம்புயம்-வாரிசம்-சல
சம்-கஞ்சம்-வநசம் - கோகந
தம்-கமலம்-முளரி- நீரோருக
ம் - திருமால்கொப்பூழ் - திரு
மலர்- இண்டை-சதபத்திரி.
ஆ உ௧.

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (உருரு) —— *வராடகந்தாமரைக் காயெனவகுப்பர். | தாமரைக்காயின்பெயர். வராடகம். (க) |
| (உருசு) சூ. *சுருள்விசிவளயம். | தாமரைச்சுருளின்பெயர். விசி-வளயம். ஆ உ. |
| (உருஎ) சூ. உற்பலங்குவலயங் கழுநீர்குவளை. | குவளைப்பொதுப்பெயர். உற்பலம்-குவலயம்-கழுநீர். ஆ ௩. |
| (உருஅ) சூ. நீலோற்பலமிந்தீவரங்குவலய,நீலம்பானல் காவிகருங்குவளை, கல்லாரமுமெனக்கழறலா [கும் | +கருங்குவளையின்பெயர். நீலோற்பலம் - இந்தீவரம்-குவலயம் - நீலம் - பானல்-காவி-கல்லாரம். ஆ எ. |
| (உருகூ) சூ. செங்குவளையரத்த முற்பலஞ் செங்கழுநீர். | செங்குவளையின்பெயர். அரத்தம்-உற்பலம்-செங்கழுநீர். ஆ ௩. |
| (உசo) சூ. குவலயநெய்தலாகவுங்கூறு [வர். | குவலயமெனும்பெயர். நெய்தற்குமுரித்து. |
| (உசக) சூ. கைரவஞ்செவ்வல்லிசெவ்வாம்பலாகும். | செவ்வாம்பலின்பெயர். கைரவம்-செவ்வல்லி. ஆ உ. |
| (உசஉ) சூ. வெள்ளாம்பல்சேதாம்பலென்றிருவிகற்பமுங், கொள்பமன்னேகுமுதப்பெயர்க்கொ [டை. | குமுதமென்னும்பெயர். வெள்ளாம்பற்குஞ் செவ்வாம்பற்குமுரித்து. |
| (உச௩) சூ. ஆம்பனுநெய்தனுமல்லியுங்குமுதம். | +குமுதத்தின்பெயர். ஆம்பல்-நெய்தல்- அல்லி - ஆ ௩. |
| (உசச) சூ. அல்லியகவிதழ். | அகவிதழின்பெயர். அல்லி. (க) |
| (உசரு) சூ. புல்லிபுறவிதழ்.] பொ | புறவிதழின்பெயர். புல்லி. (க)] பொ |

+ பிங்கலந்தைமுதலியவற்றில் கருங்குவளையைக் கருநெய்தலெனவும், குமுதத்தைவெண்ணெய்தலெனவுங்கூறுவர்.

சூத்திரம். | பெயர்ப்பிரிவு

(உசகூ) ——
பொருட்டேகன்னிகைபூவி
னுட்கொட்டை.

பூவினுட்கொட்டையின்
பெயர்.
பொருட்டு-கன்னிகை.
ஆக உ.

(உசஎ) சூ.
கோட்டுப்பூக்கொடிப்பூநீர்
ப்பூநிலப்பூத், தோற்றமுடை
யபூவின்றொடர்பே.

பூவின்வகையாவன
கோட்டுப்பூ-கொடிப்பூ-நீர்
ப்பூ-நிலப்பூ. ஆக ச.

(உசஅ) சூ.
முகை நனை கலிகை முகிழ் சி
னை கோரக, + நகைகன்னிகை
போகிலரும்புமொட்டே.

மொட்டின்பெயர்.
முகை-நனை-கலிகை-முகிழ்-
சினை-கோரகம்-நகை-கன்னி
கை-போகில்-அரும்பு. ஆக கூ.

(உசகூ) சூ.
அலர்தாரலரிபோதுவீதுண
ர், மலரோடிணரிவை மலர்ந்த
பூவே.

பூவின்பெயர்.
அலர்-தார்-அலரி-போது-
வீ-துணர்-மலர்-இணர்.
ஆக அ.

(உருய) சூ.
துணரோமஞ்சரிவல்லரிதொ
த்தோ, டிணரோகுலையிவைபூங்
கொத்தென்ப.

பூங்கொத்தின்பெயர்.
துணர் - மஞ்சரி - வல்லரி -
தொத்து-இணர்-குலை. ஆக ௬.

(உருக) சூ.
நல்லிசையம்பத் செல்வச்
சேந்தனில், வரைவில்கல்வியிற்
படையிற்கொடையில்,வெல்லு
நரணிவாகைவெற்றிப்பூவே.

வரம்பில்லாத கல்வியிலும்
படையிலுங் கொடையிலும்பி
றரை வெல்லுநரணியும் வெற்
றிப்பூவின்பெயர்.
வாகை. (க)

(உருஉ) சூ.
செம்மல்பழைம்பூ வாகச்
செப்புவர்.

பழம்பூவின்பெயர்.
செம்மல். (க)

(உருங) சூ.
மகரந்தங்கேசரங் கொங்கு
மலர்த்தாதே.

மலர்த்தாதின்பெயர்.
மகரந்தம்-கேசரம் - கொ
ங்கு. ஆக ங.

(உருச) சூ.
எடுந்தோடும்பூவினிதழே.

பூவிதழின்பெயர்.
எடு-தோடு. ஆக உ.

தொ | தொ.

+ நகையென்பது-அடைமொழியெனக்கொளினுமமையும்.

சூத்திரம். | பெயர்ப்பிரிவு.

(உருரு) ——
தொடையல்வாசிகை சிகழி கைகோதை,படலையலங்கல்கத் திகைபிணைய,லணியல்சுருக்கை தொடலைதாமந், தொங்கறெரி யல்கண்ணிதார்சூட்டு, மஞ்சரி யொலியலிலம்பகமாலை.

மாலையின்பெயர்.
தொடையல்-வாசிகை-சிகழிகை-கோதை-படலை-அலங்கல்-கத்திகை-பிணையல்-அணியல்-சுருக்கை-தொடலை-தாமம்-தொங்கல் - தெரியல்-கண்ணி-தார்-சூட்டு-மஞ்சரி- ஒலியல்· இலம்பகம். ஆ உ௰.

(உருசு) சூ.
* பிணையல் பின்னியமாலைப் பெயரே.

பின்னியமாலையின்பெயர்.
பிணையல். (க)

(உருஎ) சூ.
சூட்டுடனிலம் பகநுதலணி மாலை.

நுதலணிமாலையின்பெயர்.
சூட்டு-இலம்பகம். ஆ உ.

(உருஅ) சூ.
மாலைசிகழிகைவாசிகைதொடைய, லாகுமென்பவறிந்திசி னோரே.

வாசிகையின்பெயர்.
மாலை- சிகழிகை - தொடையல். ஆ ௩.



நாடேபிறர் நாட்டிற்குவமையாறே, காலமறிந்துதவுங் காவிரிதானே,பாடவர்திலகனம்பன்மன்ன,னீடிசைத்தலை வனருவந்தைச்சேந்த, ஞய்ந்ததிவாகரத் தரும்பொருள் விளக்கு, நான்காவதுமரப்பெயர்த்தொகுதி முற்றிற்று.



ஐந்தாவது

# இடப்பெயர்த்தொகுதி.

சூத்திரம்.

(க)

*அமுதங்கேவலமபவருக்கம் வீடு, சிவங்கைவல்லியஞ் சித்தி மீளாக்கதி,பரகதியோடுமுத்தி பஞ்சமகதி, நிர்வாண மோக்கமெனநிகழ்த்தினரே.

(உ) சூ

தாநந்துறக்கம் பொன்னுலகும்பர்,வானகமமருலகுயர் நிலைபத்தேள்,வியனுலகுவிசும்பு விண்ணுலகுநாகம், பவநமாசுவர்க்கந்தெய்வலோகப்பெயரே.

(ங) சூ.

*பவநநாகலோகப்பாலதாம்.

(ச) சூ.

சேணியுஞ்சேடியும்விஞ்சையர்சேர்விடம்.

(ரு) சூ.

மாதிரமாசைவம்பதிசைப்பெயர்.

(சா) சூ.

கருபமிசைபுலந்தேந்திக்கரிதம், விசும்புமுலகுங் கோக்காட்டையுமாம்.

(எ) சூ.

குணக்கேபூருவமிந்திரிபிராசி,கிழக்குக்கீழ்த்திசை கிளக்குங்காலே.

அ

பெயர்ப்பிரிவு.

மோக்கத்தின்பெயர்.

அமுதம்-கேவலம்- அபவருக்கம்-வீடு-சிவம்- கைவல்லியம்-சித்தி- மீளாக்கதி- பரகதி-முத்தி - பஞ்சமகதி - நிர்வாணம். ஆ கஉ.

தெய்வலோகத்தின்பெயர்.

தாநம்- துறக்கம்- பொன்னுலகு-உம்பர்-வானகம்- அமருலகு - உயர்நிலை - பத்தேளுலகு-விசும்பு-விண்ணுலகு- நாகம்-பவநம்-சுவர்க்கம். ஆ கங.

நாகலோகத்தின்பெயர்.

பவநம். (க)

விஞ்சையருலகத்தின்பெயர்.

சேணி-சேடி. ஆ உ.

திசையின்பெயர்.

மாதிரம்-ஆசை-வம்பல். ங.

மற்றுந்திசையின்பெயர்.

கருபம்- மிசை- புலம்- தேம்-திக்கு-அரிதம்- விசும்பு-உலகு-கோ-காட்டை. ய

ஆ யங.

கீழ்த்திசையின்பெயர்.

குணக்கு-பூருவம்- இந்திரி-பிராசி-கிழக்கு. ஆ ரு.

அ

சூத்திரம்.

(அ)

அவாசிதக்கணம்யாமியந்தெ
க்குச், சிவேதைமற்றிவைதெற்
கெனலாகும்.

(கூ) சூ.

மேக்குப் பச்சி மங்குடக் கி
வைமேற்கே.

(ய) சூ.

வாருணம் பிரத்தியக்கு மதுவே.

(கக) சூ.

உதக்கேயுதீசியுத்தர மென்
ன,வடக்கின்பெயரிவைவைக்கு
ங்காலே.

(கஉ) சூ.

அவநிகாசிநி மேதிநி யளக்க
ர், தரணிதாரணி தராதலங்குவ
லயம், புடவி பூதலந் தரைபடி
ஞாலம், வையமகிலங் குமண்பு
வியார்+நா,டுலகுபுவநி பாரியு
கநேமி, யகலிடம் பொறையர
ண் மண்டிலம் பூத்திணை, தலம்
பொழில் பிருதிவிவேலாவலய,
நிலஞ்சகந்தாலம் பூமியென திக
ழ்த்தினர்.

(கங) சூ.

நிரயந்துருக்கம்பாதாளங்கும்
பி,யள்ளலளறேயருஞ் சிறையி
ருணில,மெரியுந்திமிரமுமிரௌ
ரவமென்றிவை, நரகின் பெய
ரொனநவிலப்படுமே.

பெயர்ப்பிரிவு.

தெற்கின்பெயர்.

அவாசி - தக்கணம் - யாமிய
ம்-தெக்கு-சிவேதை. ஆடு டு.

மேற்கின்பெயர்.

மேக்கு-பச்சிமம்-குடக்கு.ங.

மற்றுமேற்கின்பெயர்.

வாருணம்-பிரத்தியக்கு. உ.

ஆடு டு.

வடக்கின்பெயர்.

உதக்கு-உதீசி-உத்தரம்.

ஆடு ங.

பூமியின்பெயர்.

அவநி-காசிநி-மேதிநி - அளக்
கர்-தரணி-தாரணி-தராதலம்-
குவலயம்-புடவி - பூதலம் - த
ரை-படி-ஞாலம்-வையம்-அகி
லம்-கு-மண்-புவி-பார்-நாடு-
உலகு-புவநி-பாரி-யுகம்- நே
மி-அகலிடம் - பொறை - அர
ண்-மண்டிலம்-பூ- திணை - தல
ம்-பொழில்-பிருதிவி- வேலா
வலயம்-நிலம்-சகம்-தாலம்.

ஆடு ஙஅ.

நரகத்தின்பெயர்.

நிரயம்- துருக்கம்- பாதாள
ம்-கும்பி - அள்ளல்- அளறு - அ
ருஞ்சிறை-இருணிலம்-எரி- தி
மிரம் - இரௌரவம். ஆடு யக.

ப ப

+ நாடுநடுவென்வும்பாடம்.

(கச) சூ.
புவநநாடு பொழிறலம் புட
வி,பவநமுலகின் பொதுப்பெ
யர்ப்பால.

(கரு) சூ.
பைதிர மண்டிலம் பாண்டி
றேயந், தண்ணடைசநபத மக
ளுள் சும்மை, கண்டமேணியுல
கென்றிவைநாடே.

(கசு) சூ.
விலங்கலடுக்கல் வெற்புப்ப
ருப்பதஞ்,சிலம்பு நாகங்குறும்
பொறை சிகரம், வேதண்டம்
வேரங்கிரிதிகிரிசையம், தரணி
பூதரமோங்கல்பிறங்கல்,குவடு
குன்றேதிபறம்புவரைவிண்டு,
போதி கோச்சிலையிறும்பு தட
மாதிரம்,பொச்சை நவிர்கல்லக
ம்பொருப்புநகமசலஞ்,சாரல்
சிலோச்சயஞ் சைலமலையென்
[ப.

(கஎ) சூ.
பொன்மலைமேரு.

(கஅ) சூ.
*வெண்மலைவேதண்டம்விச
யார்த்தம்வெள்ளிமலை.

(ககூ) சூ.
பொதியமலைமலயம்.

(உ௰) சூ.
வல்லியம்பொருப்பே கொ
ல்லிமலையாகும்.

இ

உலகின்பொதுப்பெயர்.
•புவநம்-நாடு-பொழில்-தல
ம்-புடவி-பவநம். ஆ சு.

நாட்டின்பெயர்.
பைதிரம்-மண்டிலம்-பாண்
டில்-தேயம்-தண்ணடை-சந
பதம்-அகளுள்-சும்மை-கண்ட
ம்-எணி-உலகு. ஆ யக.

மலையின்பெயர்.
விலங்கல்-அடுக்கல்-வெற்
பு-பருப்பதம்-சிலம்பு-நாக
ம்-குறும்பொறை-சிகரம்-வே
தண்டம்-வேரம்-கிரி-திகிரி-சை
யம்-தரணி-பூதரம்-ஓங்கல்-பி
றங்கல்-குவடு-குன்று-ஓதி-பற
ம்பு-வரை-விண்டு-போதி-
கோ-சிலை-இறும்பு-தடம்-மா
திரம்-பொச்சை-நவிர்-கல்லக
ம்-பொருப்பு-நகம்-அசலம்-
சாரல்-சிலோச்சயம்-சைலம்.
ஆ ஙஅ.

மேருவின்பெயர்.
பொன்மலை. (க)

வெள்ளிமலையின்பெயர்.
வெண்மலை-வேதண்டம்-வி
சயார்த்தம். ஆ ங.

பொதியமலையின்பெயர்.
மலயம். (க)

கொல்லிமலையின்பெயர்.
வல்லியம்பொருப்பு. (க)

இ

(உக) சூ.
இறும்பு பொச்சை குவடுப்
த்லெ, பிறங்கல்பொற்றைகுறும்
பொறைகுன்றே.

குன்றின்பெயர்.
இறும்பு-பொச்சை-குவடு-
பத்லெ-பிறங்கல் - பொற்றை-
குறும்பொறை. ஆ எ.

(உஉ) சூ.
கோடுகொடுமுடிகுவடுசிகர
ஞ், சிமையமைந்து மலேயினுச்சி.

மலேயுச்சியின்பெயர்.
கோடு-கொடுமுடி - குவடு-
சிகரம்-சிமையம். ஆ ரு.

(உங) சூ.
வாரமுந்தடமுஞ் சாரலு ம
லேப்பக்கம்.

மலேப்பக்கத்தின்பெயர்.
வாரம்-தடம்-சாரல். ஆ ங.

(உச) சூ.
அறையேபாறை.

பாறையின்பெயர்.
அறை. (க)

(உரு) சூ.
பொறையேதுறுகல்.

துறுகல்லின்பெயர்.
பொறை. (க)

(உசா) சூ.
முடுக்கர் கந்தர மலேமுழை
யென்ப.

மலேமுழையின்பெயர்.
முடுக்கர்-கந்தரம். ஆ உ.

(உஎ) சூ.
பிலமேகீழறை.

கீழறையின்பெயர்.
பிலம். (க)

(உஅ) சூ.
* நிகுஞ்சங்குகையாம்.

குகையின்பெயர்.
நிகுஞ்சம். (க)

(உகூ) சூ.
கண்டறைகற்புழை.

கற்புழையின்பெயர்.
கண்டறை. (க)

(ஙய) சூ.
* கற்பாழிகாண்டையுங் கரு
துவரதற்கே.

மற்றுங்கற்புழையின்பெயர்.
கற்பாழி-காண்டை. உ.
ஆ ங.

(ஙக) சூ.
சிலேயேகல்லே.

கல்லின்பெயர்.
சிலே. (க)

(ஙஉ) சூ.
உலமேதிரள்கல்.

திரள்கல்லின்பெயர்.
உலம். (க)

(ஙங) சூ.
நூழையுஞ்சுருங்கையுநுழை
வாயிலாகும்.

நுழைவாயிலின்பெயர்.
நூழை-சுருங்கை. ஆ உ.

வி

(௩௪) சூ.
விடர்மலைப் பிளப்பென விளம்பினர்புலவர்.
(௩௫) சூ.
விடருங்கமரும் வெடிப்பின் பெயரே.
(௩௬) சூ.
திட்டைதிடரே.
(௩௭) சூ.
பதுக்கைசிறுதிட்டை.
(௩௮) சூ.
பரலடுத்துயர் நில முரம்பெனப்படுமே.
(௩௯) சூ.
திட்டைதிடறுசுவல் வல்லை வன்பான், மெட்டுத்திடர்படர்குப்பைகுவால்குவை, யெட்டிய பதினொன்று மேடென வுரைப்பர்.
(௪0) சூ.
ஆம்பிலம்பாதலம்பாதாளப்பெயரே.
(௪௧) சூ.
அத்திபௌவமளக்கரார்கலி, யாழிபெருநீரம்பரமுந்நீ, ருப்புவீரைசக்கரஞ் சாகரம், வேலைவெள்ள மகராலயநேமி, சலநிதிவாரிசலதியலையே, பாராவாரமுததிசமுத்திரம், பரவையுவர்நரலைபுணரிவாரிதி, வேலாவலயங்கார்கோ ளோதம், வாருணஞ்சிந்து வாரமம்புராசி, கார்மவி

மலைப்பிளப்பின்பெயர்.
விடர். (௧)

வெடிப்பின்பெயர்.
விடர்-கமர். ஆ௨.

திடரின்பெயர்.
திட்டை. (௧)

சிறுதிட்டையின்பெயர்.
பதுக்கை. (௧)

பரலடுத்துயர்நிலத்தின்பெயர்
முரம்பு. (௧)

மேட்டின்பெயர்.
திட்டை-திடறு-சுவல் - வல்லை-வன்பால்-மெட்டு-திடர்-படர்-குப்பை-குவால்-குவை.
ஆ௰௧.

பாதாளத்தின்பெயர்.
ஆம்பிலம்-பாதலம். ஆ௨.

கடலின்பெயர்.
அத்தி-பௌவம்- அளக்கர்-ஆர்கலி-ஆழி- பெருநீர் - அம்பரம்-முந்நீர்-உப்பு-வீரை-சக்கரம்-சாகரம்-வேலை-வெள்ளம்-மகராலயம்-நேமி-சலநிதி-வாரி-சலதி-அலை-பாராவாரம்-உததி-சமுத்திரம் -பரவை-உவர்-நரலை-புணரி-வாரிதி - வேலாவலயம்-கார்கோள்-ஓதம்-வா

லியுவரிகடலெனக்கருதுவர்.

(௪௨) சூ.
ஓதமும்புணரியுங்கடற்றிரை யாகும்.

(௪௩) சூ.
சீகரந்தரங்கமறல்கல்லோல, மலைபுனற்றிரைக்கு வரும்பொதுப்பெயரே.

(௪௪) சூ.
வேலையும்பாராவாரமுங்கடற்கரை.

(௪௫) சூ.
தீரம்பாரம் வரையணைகோடு, கூலம் வாரம் புனற் கரைப் பொதுப்பெயர்.

(௪௬) சூ.
குலையுஞ் சேதுவுங்குரம்புஞ்செய்கரை.

(௪௭) சூ.
அருவிமலைச்சாரல்வரும்யாறாகும்.

(௪௮) சூ.
கலுழியுமுயவையுமுல்லைக் கான்யாறு.

(௪௯) சூ.
உந்திநதி துறை வருபுனல்குடிஞை,சிந்துவோடொலியலாறெனச்செப்புவர்.

(௫௰) சூ.
கானன்மூரம்புகாயன்முகங் கழி.

அ

வாருணம்-சிந்து-வாரம்- அம்புராசி-உவரி. ஆ௲௩.

கடற்றிரையின்பெயர்.
ஓதம்-புணரி. ஆ௨.

புனற்றிரைப் பொதுப்பெயர்.
சீகரம்-தரங்கம்-அறல்- கல்லோலம்-அலை. ஆ௫.

கடற்கரையின்பெயர்.
வேலை-பாராவாரம். ஆ௨.

புனற்கரைப் பொதுப்பெயர்.
தீரம்-பாரம்-வரை- அணை-கோடு-கூலம்-வாரம். ஆ௭.

செய்கரையின்பெயர்.
குலை-சேது-குரம்பு. ஆ௩

மலைச்சாரல்வரும்யாற்றின் பெயர்.
அருவி. (௧)

முல்லைக்கான்யாற்றின் பெயர்.
கலுழி-உயவை. ஆ௨.

ஆற்றின்பொதுப்பெயர்.
உந்தி-நதி-துறை-வருபுனல்-குடிஞை- சிந்து - ஒலியல். ஆ௭.

கழியின்பெயர்.
கானல்-மூரம்பு-காயல்-முகம் ஆ௪.

அ

சூத்திரம்.

(௫௧) ———

அதோமுகம் புகாரோடழி வில்கூடல், கழிமுகமென்று கருதல்வேண்டும்.

(௫௨) சூ.

உப்பளங்காய லுவளகமளக் [கர்.

(௫௩) சூ.

பொன்னிகாவிரி.

(௫௪) சூ.

பொருநைதண்பொருந்தம்

(௫௫) சூ.

குமரிகந்தியாகக்கூறுவர்.

(௫௬) சூ.

வேகவதிவேயையையாகும்.

(௫௭) சூ.

ஆனிவானியான்பொருந்த [மாகும்.

(௫௮) சூ.

* கோதைகௌதமையாகக் கொள்வர்.

(௫௯) சூ.

* விருத்தகங்கைவிமலைகோ [தாவிரி.

(௬௰) சூ.

*பாலிகோநதிபால்யாறுகும்

(௬௧) சூ.

அலந்தைபண்ணைகோட்ட கங்கிடங்கோ, டிலஞ்சிதாங்கல் சுனையேல்வையோடை, வட்டந்தடாக மடுக்குளம்வலயங், குட்டங்குண்டம்பட்டஞ்சுழி, பொய்கைகேணியாவிதடம்ப டுகரேரிகயம்பயமுவளகம்வாவி.



பெயர்ப்பிரிவு.

கழிமுகத்தின்பெயர்.

அதோமுகம்-புகார்-கூடல் ஆ௩.

உப்பளத்தின்பெயர்.

காயல்-உவளகம்-அளக்கர். ஆ௩.

காவிரியின்பெயர்.

பொன்னி. (௧)

பொருநையின்பெயர்.

தண்பொருந்தம். (௧)

கந்தியின்பெயர்.

குமரி. (௧)

வையையின்பெயர்.

வேகவதி. (௧)

ஆன்பொருந்தநதியின்பெயர்.

ஆனி-வானி. ஆ௨.

கௌதமைநதியின்பெயர்

கோதை. (௧)

கோதாவிரியின்பெயர்.

விருத்தகங்கை-விமலை. ஆ௨.

பால்யாற்றின்பெயர்.

பாலி-கோநதி. ஆ௨.

வாவியின்பெயர்.

அலந்தை-பண்ணை-கோட்டகம்-கிடங்கு- இலஞ்சி- தாங்கல்- சுனை-எல்வை- ஓடை-வட்டம்- தடாகம்-மடு- குளம்-வலயம்-குட்டம்-குண்டம்- பட்டம்-சுழி- பொய்கை - கேணி - ஆவி- தடம்- படுகர்-எரி-கயம்-பயம்-உவளகம். ஆ௨௭.

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (௬௨) ——— இலவந்திகையேயெந்திராவா[வி. | எந்திரவாவியின்பெயர். இலவந்திகை. (௧) |
| (௬௩) சூ. இலங்கையுந் துருத்தியு மெனவரும்பெயரோ, டரங்கமுமாற்றிடைக்குறையெனவறைவ[ர். | யாற்றிடைக்குறையின் பெயர். இலங்கை - துருத்தி - அரங்கம். ஆ௩. |
| (௬௪) சூ. ஊருணும்பொதுநீ ரூருணியாகும். | ஊருணுநீர்ப்பெயர். ஊருணி. (௧) |
| (௬௫) சூ. கூவலுமகும்புங் கூபமுங்குழியும், பூவலுங்கேணியுந் தாவுங்கிணறே. | கிணற்றின்பெயர். கூவல் - அகும்பு - கூபம் - குழி - பூவல் - கேணி - தாவு. ஆ௭. |
| (௬௬) சூ. அஃகுமுறவியு மகும்புமூற[ல். | ஊறலின்பெயர். அஃகு - உறவி - அகும்பு - ஆ௩. |
| (௬௭) சூ. புற்புதமொக்குள்பௌவ நீர்க்குமிழி. | நீர்க்குமிழியின்பெயர். புற்புதம் - மொக்குள் - பௌவம். ஆ௩. |
| (௬௮) சூ. நுரையேபேநமாகுமென்[ப. | நுரையின்பெயர். பேநம். (௧) |
| (௬௯) சூ. அழுந்துங்குண்டுங்கயமுமா[ழம். | ஆழத்தின்பெயர். அழுந்து - குண்டு - கயம் - ஆ௩. |
| (௭௰) சூ. வழாறும் பிராறும் வாரியுநிறைபுனல். | நிறைபுனலின்பெயர். வழாறு - பிராறு - வாரி. ஆ௩. |
| (௭௧) சூ. அகாதமென்பது நீந்துபுனலாகும். கொ | நீந்துபுனலின்பெயர். அகாதம். (௧) கொ |

சூத்திரம்.

(௭௨) ———

கோலமென்பது கொழுந்துநீரோட்டம்.

(௭௩) சூ.

சற்சலமென்பதுதெளிநீராகும்

(௭௪) சூ.

விலங்கல்கலுழிகலங்கற்புனலே.

(௭௫) சூ.

அள்ளலசறுடளக்கரளுறு, கொள்ளமளறுகுழம்புகாலாழ், தொள்ளிபங்கம்பூழிகுழைசேறே.

(௭௬) சூ

தொய்யிலொளியேசெதும்புசேதகஞ்,செய்யலென்றிவை சேறெனத்தகுமே.

(௭௭) சூ

அருப்பமசடமழுவம் வழுக்குநிலம்.

(௭௮) சூ.

அசும்புமயசுமசுபாகந்தன்னுட, னங்கணமுஞ் சகதியும் பொல்லாநிலமே.

(௭௯) சூ.

வாலுகம்வெண்மணல்.

(௮௰) சூ.

புளிநமணற்குன்றே.

(௮௧) சூ

அதரயிர் நுண்மணல்.

(௮௨) சூ.

பொடிபூழ்திபுழுதியாகுமென்ப.]

அ

பெயர்ப்பிரிவு.

கொழுந்துநீரோட்டத்தின் பெயர்.

கோலம். (௧)

தெளிநீரின்பெயர்.

சற்சலம். (௧)

கலங்கற்புனலின்பெயர்.

விலங்கல்-கலுழி. ஆ ௨.

சேற்றின்பெயர்.

அள்ளல்-அசறு-அளக்கர்-அளுறு-கொள்ளம்-அளறு-குழம்பு-காலாழ்-தொள்ளி-பங்கம்-பூழி-குழை. ஆ ௰௨.

மற்றுஞ்சேற்றின்பெயர்.

தொய்யில்-தொளி-செதும்பு-சேதகம்-செய்யல் ௫.

ஆ ௰௭.

வழுக்குநிலத்தின்பெயர்.

அருப்பம்-அசடம்-அழுவம். ஆ ௩.

பொல்லாநிலத்தின்பெயர்.

அசும்பு-அயசு-அசுபாகம்-அங்கணம்-சகதி. ஆ ௫.

வெண்மணலின்பெயர்.

வாலுகம். (௧)

மணற்குன்றின்பெயர்.

புளிநம். (௧)

நுண்மணலின்பெயர்.

அதர்-அயிர். ஆ ௨.

புழுதியின்பெயர்.

பொடி-பூழ்தி- ஆ ௨.

அ

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (அரு) —— அறலேயலைநுண்கருமணலாகும் | அலைகொழித்தகருநுண்மணலின்பெயர். அறல். ஆ க. |
| (அச) சூ. மலைச்சார்புகுறிஞ்சிநிலம். | குறிஞ்சியென்பது. மலைச்சார்புநிலம். (க) |
| (அரு) சூ. கடற்சார்புநெய்தனிலம். | நெய்தலென்பது. கடற்சார்புநிலம். (க) |
| (அசா) சூ. காடுசார்நிலமுல்லை. | முல்லையென்பது. காடுசார்நிலம். (க) |
| (அஎ) சூ. நாடுசார்நிலமருதம் | மருதமென்பது. நாடுசார்நிலம். (க) |
| (அஅ) சூ. நீரின்றிவேனிற்றெறுநிலம் பாலை. | பாலையென்பது. நீரினறிவெப்புறுநிலம். (க) |
| (அகூ) சூ. அகணிபணைபண்ணைபழனங் கழனி,பானல் கம்பலைபடுகர் வயன்மருதம். | மருதநிலத்தின்பெயர். அகணி-பணை-பண்ணை-பழனம்-கழனி-பானல்-கம்பலை-படுகர்-வயல். ஆ கூ. |
| (கூ0) சூ. புறவம்புறம்பணைமுல்லைநிலப்பெயர். | முல்லைநிலத்தின்பெயர். புறவம்-புறம்பணை. ஆ உ. |
| (கூக) சூ. அறைவர் குறிஞ்சிக் குமப்பெயர்தானே. | குறிஞ்சிநிலத்தின்பெயர் புறவம்-புறம்பணை. ஆ உ. |
| (கூஉ) சூ. வன்பால்குறிஞ்சியும்பாலையுமாகும். | வன்பாலெனும்பெயர். குறிஞ்சிக்கும்- பாலைக்குமாம். |
| (கூரு) சூ. மென்பா லென்பது மருதமேற்றே. | மென்பாலெனும்பெயர். மருதத்திற்காம். |
| (கூச) சூ. முல்லையுநெய்தலுமொழிசமப்பாலே. | சமப்பாலெனும்பெயர். முல்லைக்கும்-நெய்தற்குமாம். |

சூத்திரம்.

(௬௫) ———

மலையினீரில்வநத்தில்வந்தம
ற், றிணையமிகுதிச்சொற்கருநில
ப்பெயரே.

(௬௬) சூ.

அழுவந்துருக்கமாகுமென்
[ப.

(௬௭) சூ.

பாக்கம்பட்டினம்பதிநகர்
சும்மை,பூக்கஞ்சேரிபுரமுட்ட
ம்பூண்டி, யகரங்குடியே குறி
ச்சிகோசர,மகலுணொச்சியிரு
க்கைவேலி, குப்பம்பாடிகுறு
ம்புபாழி, சிறுகுடிதண்ணடை
யுறையுளெயிலொடு,வாழ்க்கை
யுட்படுத் திருபத்தேழு, நாடி
னூரொனநவின்றிசினோரே.

(௬௮) சூ.

சூரந்தநீரும்வயலுஞ்சூழ்ந்த
வூர், கிராமமாகக்கிளக்கப்படு
மே.

(௬௯) சூ.

குடியைஞ்ஞூறுகுறைவறநி
றைந்தது,பெருங்கிராமமென
ப்பேசப்படுமே.

(௭௰) சூ.

கிரியலகுழவடுத்தவூர், கேட
கம்.

(௭௧) சூ.

மலையுமாறுமடுத்தவூர்கர்வ
டம்.



பெயர்ப்பிரிவு.

கருநிலமென்பது.

மலையினு நீரினும் வநத்தினு
மிகுதிநிலம்.

அருக்கத்தின்பெயர்.

அழுவம். (௧)

ஊரின்பெயர்.

பாக்கம்-பட்டினம்-பதி-ந
கர்-சும்மை-பூக்கம்-சேரி-புர
ம்-முட்டம்-பூண்டி-அகரம்-
குடி-குறிச்சி-கோசரம்-அக
லுள்-நொச்சி-இருக்கை-வே
லி-குப்பம்.பாடி-குறும்பு-பா
ழி-சிறுகுடி.தண்ணடை.உறை
யுள்-எயில்-வாழ்க்கை.ஆ உள

நீரும்வயலுஞ்சூழ்ந்தவூரின்
பெயர்.

கிராமம். (௧)

ஐஞ்ஞூறுகுடிநிறைந்தவூ
ரின்பெயர்.

பெருங்கிராமம். (௧)

மலைசூழ்ந்தவூரின்பெயர்

கேடகம். (௧)

மலையுமாறுஞ்சூழ்ந்தவூரி
ன்பெயர்.

கர்வடம். (௧)

சூத்திரம்.

(௱உ) ——
பண்டம்பலகொடுபகருங்க
டற்கரை, மன்னும்பதியேபட்
டினமாகும்.

(௱௩) சூ.
பட்டுநொச்சியும்பள்ளியுஞ்
சிற்றூர்.

(௱ச) சூ.
குறிச்சிசிறூர்குறிஞ்சிநிலத்
[தூர்.

(௱ரு) சூ.
பாடிமுல்லைப்பதி.

(௱௬) சூ.
பட்டினநெய்தற்பதி.

(௱எ) சூ.
முனையிடங்குறம்புமுதுபா
லைநிலத்தூர்.

(௱அ) சூ.
பூக்கங்குடிக்காடூரியமுறை
யுள், பாக்கமருப்பமகலுள்பதி
யே, கோட்டம்வசதிதாவளநிய
மம், வாழ்க்கைதண்ணடைமரு
தநிலத்தூர்ப்பெயர்.

(௱கூ) சூ.
பாடியும்புரமுநகரப்பதி
[யே.

(௱௰) சூ.
குஞ்சரமியிருக்கைகோணமுக
[மே.

(௱கக) சூ.
மருங்கிலூர்சூழ் பெரும்பதி
மடப்பம்.

பெயர்ப்பிரிவு.

பலபண்டம்பகருங் கடற்கரை
யூரின்பெயர்.
பட்டினம். (க)

சிற்றூரின்பெயர்.
பட்டு-நொச்சி-பள்ளி.
ஆ ௩.

குறிஞ்சிநிலத்தூரின்பெயர்.
குறிச்சி-சிறூர். ஆ உ.

முல்லைநிலத்தூரின்பெயர்.
பாடி. (க)

நெய்தனிலத்தூரின்பெயர்.
பட்டினம். (க)

பாலைநிலத்தூரின்பெயர்.
முனையிடம்-குறும்பு.
ஆ உ.

மருதநிலத்தூரின்பெயர்.
பூக்கம்-குடிக்காடு-பூரியம்-
உறையுள் - பாக்கம் - அருப்ப
ம்-அகலுள்-பதி-கோட்டம் -
வசதி-தாவளம்- நியமம்-வாழ்
க்கை-தண்ணடை. ஆ ௰ச.

நகரப்பதியின்பெயர்.
பாடி-புரம். ஆ உ.

குஞ்சரமிருக்கையின்பெயர்.
கோணமுகம். (க)

மருங்கிலூர்சூழ்பெரும்
பதியின்பெயர்.
மடப்பம். (க)

சூத்திரம்.

(௱௰௨) சூ.
கொடுங்குறும்பரரணிருக்கை
குறும்பென்றாகும்.

(௱௧௩) சூ.
பாசறைமுனைமேற்சென்
றோருறைபதி.

(௱௧௪) சூ.
கோழியுறையூர்.

(௱௧௫) சூ.
கூடன்மதுரை.

(௱௧௬) சூ.
*மன்றஞ்சிதம்பரம்.

(௱௧௭) சூ.
*கமலைதிருவாரூர்.

(௱௧௮) சூ.
கருவூர்வஞ்சி.

(௱௰௯) சூ.
காகந்திபுகார்காவிரிப்பூம்ப
ட்டினம்.

(௱௨௰) சூ.
உஞ்சையவந்தி.

(௱௨௧) சூ
காசிவாரணசி.

(௱௨௨) சூ.
கச்சிகாஞ்சி.

(௱௨௩) சூ.
விதேகையென்பது மிதிலை
யாகும்.

(௱௨௪) சூ.
விநிதைசாகேதங்கோசலைய
யோத்தி.



பெயர்ப்பிரிவு.

கொடுங்குறும்பரரணிருக்
கையின்பெயர்.
குறும்பு. (௧)

முனைமேற்சென்றோரு
றைபதியின்பெயர்.
பாசறை. (௧)

உறையூரின்பெயர்.
கோழி. (௧)

மதுரையின்பெயர்.
கூடல். (௧)

சிதம்பரத்தின்பெயர்.
மன்றம். (௧)

திருவாரூரின்பெயர்.
கமலை. (௧)

கருவூரின்பெயர்
வஞ்சி. (௧)

காவிரிப்பூம்பட்டினத்தி
ன்பெயர்.
காகந்தி-புகார். ஆ உ.

அவந்தியின்பெயர்.
உஞ்சை. (௧)

காசியின்பெயர்.
வாரணசி. (௧)

காஞ்சியின்பெயர்
கச்சி. (௧)

மிதிலையின்பெயர்.
விதேகை. (௧)

அயோத்தியின்பெயர்.
விநிதை - சாகேதம்- கோச
லை. ஆ ௩.

சூத்திரம்.

(௱௨௫) ——

புரியென்கிளவிபுரமென்று [கும்.

(௱௨௬) சூ.

பாடியென்பது சேரியாகு [ம்.

(௱௨௭) சூ.

*காழகங்கடாரமாகக்கருது [வர்.

(௱௨௮) சூ.

*சிங்களமீழமாகச்செப்புவர்

(௱௨௯) சூ.

*நெல்லும்புல்லுநிறைந்தம த்தகம், புல்லுமலையூர் சம்வாக மாகும்.

(௱௩௰) சூ.

*அரித்துவாரமாயாபுரியாம்.

(௱௩௧) சூ.

கூலமங்காடிகடையாகக்கூ றுவர்.

(௱௩௨) சூ.

ஆவண நியம மாக வு முரித் [தே.

(௱௩௩) சூ.

ஆவணம்வீதிஞெள்ளன்மறு கு, கோசநியமமார்க்கந்தெரு [வே.

(௱௩௪) சூ.

சிறகெனவொருவழிச்செப் பவும்படுமே.

(௱௩௫) சூ

மன்றமார்க்க நியம நெடுந் தெருவே.

பெயர்ப்பிரிவு.

புரியெனும்பெயர்.

புரத்திற்குரித்து. (௧)

பாடியெனும்பெயர்.

சேரிக்குரித்து. (௧)

கடாரத்தின்பெயர்.

காழகம். (௧)

சிங்களத்தின்பெயர்.

ஈழம். (௧)

நெல்லும்புல்லு நிறைந்த மலையூரின்பெயர்.

சம்வாகம். (௧)

அரித்துவாரத்தின்பெயர்.

மாயாபுரி. (௧)

கடையின்பெயர்.

கூலம்-அங்காடி. ௨.

மற்றுங்கடையின்பெயர்.

ஆவணம்-நியமம். ௨.

ஆ-௪.

தெருவின்பெயர்.

ஆவணம்-வீதி-ஞெள்ளல்-மறுகு-கோசம்-நியமம்-மார்க்கம். ௭.

மற்றுந்தெருவின்பெயர்.

சிறகு. (௧)

ஆ-௮

நெடுந்தெருவின்பெயர்.

மன்றம்-மார்க்கம்-நியமம்.

ஆ-௩.

சூத்திரம்.

(ருரு௬) ———

குறுந்தெருமறுகே.

(ருரு௭) சூ.

செண்டுவெளிவையாளிவீதி, பாவிவட்டந்திருமுற்றமாகும்.

(ருரு௮) சூ.

பூரியம்வேந்தர்வீதியாகும்.

(ருரு௯) சூ.

கோணமுடுக்குத்தெருவாகும்மே.

(ருசய) சூ.

அந்திமுச்சந்தி.

(ருசக) சூ.

அந்திகவலைவரியேசந்தி.

(ருசஉ) சூ.

மூத்தையோர் சதுக்கநாற்சந்தியென்ப.

(ருசரு) சூ.

சேடியும்வாடையுஞ்சிரோணியாகும்.

(ருசச) சூ.

ஆலிடமெனவுமறையப்படுமே.

(ருசரு) சூ.

ஆவேசநமக்கசாலையர்வீதி.

(ருச௬) சூ.

பக்கணம் வேடர் வீதியாகு [ம்.

(ருச௭) சூ.

*சந்துசதுக்கம்.

(ருச௮) சூ.

சிநகரஞ்சேதிமந்தேவராலய,நிலயம்பாழிபள்ளிநிகேதந,

ம

பெயர்ப்பிரிவு.

குறுந்தெருவின்பெயர்.

மறுகு. (க)

குதிரைவையாளிவீதியின் பெயர்.

செண்டுவெளி - பாவிவட்டம்-திருமுற்றம். ஆகரு

வேந்தர்வீதியின்பெயர்.

பூரியம். (க)

முடுக்குத்தெருவின்பெயர்

கோணம். (க)

முச்சந்தியின்பெயர்.

அந்தி. (க)

சந்தியின்பெயர்.

அந்தி-கவலை-வரி. ஆகரு.

நாற்சந்தியின்பெயர்.

சதுக்கம். (க)

சிரோணியின்பெயர்.

சேடி-வாடை. உ.

மற்றுஞ்சிரோணியின்பெயர்.

ஆலிடம். (க)

ஆகரு.

அக்கசாலையர்வீதியின்பெயர்

ஆவேசநம். (க)

வேடர்வீதியின்பெயர்.

பக்கணம். (க)

சந்தின்பெயர்.

சதுக்கம். (க)

கோயிலின்பெயர்.

சிநகரம்-சேதிமம்-தேவராலயம்-நிலயம்-பாழி-பள்ளி-

நி

சூத்திரம்.

மந்திரமாலயந்தேவகுலங்கோட்டஞ் நகர்தளிவானவருறையுள் கோயில்.

(ாசகூ) சூ.

சத்திரஞ்சாலை யறச்சாலையாகும்.

(ாருய) சூ.

அறப்புறமோதும்பள்ளியாரும்.

(ாருக) சூ.

சமித்தமோமமண்டபஞ்சாரும்.

(ாருஉ) சூ.

சாலைமாளிகைபவநங்கோயிற்,குலமுமன்னரில்லாகக்கூறவ[ர்.

(ாருந) சூ.

கந்தவாரமுமுவளகமுமந்தப்,புரமுந்தேவியர்மனையாகுமென்ப.

(ாருச) சூ.

மாடமனையுறையுள்புக்கில்பதிவசதி,யிடமேபாத்திய கம்வயினில்ல , மிடவகை சேர்வுவீடென்றிசைப்பர்.

(ாருரு) சூ.

கூரை குரம்பை குடில்சிற்றிலாகும்.

(ாருசா) சூ.

புனைகல னிருக்கை பண்டசா[லை.

(ாருஎ) சூ.

வளவியிறையேவீட்டிறப்பாகும்.]

பெயர்ப்பிரிவு.

நிகேதநம்-மந்திரம்-ஆலயம்-தேவகுலம்-கோட்டம்- நகர்-தளி-வானவருறையுள்-ஆ டிச

அறச்சாலையின்பெயர்.

சத்திரம்-சாலை. ஆ உ.

ஓதும்பள்ளியின்பெயர்

அறப்புறம். (க

ஓமமண்டபத்தின்பெயர்.

சமித்தம். (க)

மன்னரில்லின்பெயர்.

சாலை - மாளிகை - பவநம். கோயில்-குலம். ஆ ரு.

மன்னன்றேவியிருக்கையின் பெயர்.

கந்தவாரம்-உவளகம்-அந்தப்புரம். ஆ ந.

வீட்டின்பெயர்.

மாடம்-மனை-உறையுள்-புக்கில்-பதி-வசதி-இடம்-பாத்தி-அகம்-வயின்-இல்லம்-இடவகை-சேர்வு. ஆ யந.

சிற்றிலின்பெயர்.

கூரை-குரம்பை-குடில். ஆ ந.

பண்டசாலையின்பெயர்.

புனைகலனிருக்கை. (க)

வீட்டிறப்பின்பெயர்.

வளவி-இறை. ஆ உ.

சோ

சூத்திரம்.

(௱௫அ) ——

சோபாநந்தாழ்வாரமாகும்.

(௱௫௯) சூ.

விடங்கமுகடே.

(௱௬0) சூ.

வேயுள்வேய்தல்.

(௱௬௧) சூ.

சாலகஞ்சாளரநூழைசாலேகம்,வாதாயநம்பல்கணியென ப்படுமே.

(௱௬௨) சூ

அட்டிலடுக்களை மடைப்பள்ளியாகும்.

(௱௬௩) சூ.

கல்வியூரிகல்லூரியாகும்.

(௱௬௪) சூ.

பித்திகைசுவர்த்தலம்.

(௱௬௫) சூ.

பீடிகைபீடம்.

(௱௬௬) சூ.

அங்கணத்தூம்புவாய்சலதாரையாகும்.

(௱௬௭) சூ.

முன்றிலங்கணமுற்றமாகும்.

(௱௬அ) சூ.

ஆமியநிலாமுற்ற மாகுமென்ப.

(௱௬௯) சூ.

திட்டைமண்ணீடுதெற்றிவேதிகை, திண்ணையாகுமென்மனார்புலவர்.

பெயர்ப்பிரிவு.

தாழ்வாரத்தின்பெயர்

சோபாநம். (௧)

முகட்டின்பெயர்.

விடங்கம். (௧)

வேயுளின்பெயர்.

வேய்தல். (௧)

பல்கணியின்பெயர்.

சாலகம்-சாளரம்- நூழை-சாலேகம்-வாதாயநம். ஆ ௫.

மடைப்பள்ளியின்பெயர்.

அட்டில்-அடுக்களை. ஆ ௨.

கல்வியூரி-அன்றிக்கல்விபயிலிடத்தின்பெயர்.

கல்லூரி. (௧)

சுவர்த்தலத்தின்பெயர்.

பித்திகை. (௧)

பீடத்தின்பெயர்.

பீடிகை. (௧)

சலதாரையின்பெயர்.

அங்கணம்-தூம்புவாய். ஆ ௨.

முற்றத்தின்பெயர்.

முன்றில்-அங்கணம். ஆ ௨.

நிலாமுற்றத்தின்பெயர்.

ஆமியம். (௧)

திண்ணையின்பெயர்.

திட்டை-மண்ணீடு-தெற்றி-வேதிகை. ஆ ௪.

சூத்திரம். பெயர்ப்பிரிவு.

(௱௭௰)
கற்படுத்தபூமிகுட்டிமமாகும்.

கற்படுத்தபூமியின்பெயர்.
குட்டிமம். (௧)

(௱௭௧) சூ.
தெற்றியம்பலஞ் சித்திரகூடம்.

சித்திரகூடத்தின்பெயர்.
தெற்றியம்பலம். (௧)

(௱௭௨) சூ.
பொதியிலு மன்றமும் பொதுவுமம்பலம்.

அம்பலத்தின்பெயர்.
பொதியில் - மன்றம் - பொது. ஆ ௩.

(௱௭௩) சூ.
செல்ல நீர்க்கும் பல்புகழ்ச் சேர்தனில், வல்லுநர் நாவலர் வாய்ந்தவிடமும், மல்லுஞ்சூதும் படையுமற்றுங், கல்விபயில் களமுங்கழகமாகும்.

கழகமெனும்பெயர்.
வல்லுநருநாவலருஞ்சேரிடத்திற்கு மல்லுஞ்சூதும் படையுங் கல்வியும் பயிலிடத்திற்குமுரித்து.

(௱௭௪) சூ.
ஆசிருக்கைப்பெயரத்தாணிவேத்தவை.

ஆசிருக்கையின்பெயர்.
அத்தாணி - வேத்தவை. ஆ ௨.

(௱௭௫) சூ.
போரினிடமும் வட்டாடிடமு, மாடலிடமுமவையுமரங்கம்.

அரங்கமெனும்பெயர்.
போரினிடத்திற்கும் - வட்டாடிடத்திற்கும் - ஆடலிடத்திற்கும் - அவைக்குமுரித்து.

(௱௭௬) சூ.
ஒருசிறைதுச்சில்.

ஒருசிறை - அல்லது - ஒதுக்கிடத்தின்பெயர்.
துச்சில். (௧)

(௱௭௭) சூ.
ஒருவந்தமேகாந்தங்கொட்டில்வேறிடம்.

ஏகாந்தத்தின்பெயர்.
ஒருவந்தம் - வேறிடம் - கொட்டில். ஆ ௩.

(௱௭௮) சூ.
சுருங்கைகற்படையாகுமென்ப.

கற்படையின்பெயர்.
சுருங்கை. (௧)

(௱௭௯) சூ.
ஆகரம்பிறப்பிடமுறைவிடமாகும்.

உறைவிடத்தின்பெயர்.
ஆகரம் - பிறப்பிடம். ஆ ௨.

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (௱அ௰) குமுதஞ்சுல்லிகாமரமடுப்பு, முத்தாரமெனவுமொழியப்படுமே. | அடுப்பின்பெயர். குமுதம்- சுல்லி - காமரம்- முத்தாரம். ஆ௳ ௪. |
| (௱அ௧) சூ. குடம்பைபஞ்சரங்கட்சிகூடாகும். | கூட்டின்பெயர். குடம்பை-பஞ்சரம்-கட்சி. ஆ௳ ௩. |
| (௱அ௨) சூ. குலாயநம்பஞ்சரம்பண்ணுங்கூடே. | பண்ணுங்கூட்டின்பெயர். குலாயநம்-பஞ்சரம். ஆ௳ ௨. |
| (௱அ௩) சூ. மந்திரஞ்சாலைகுதிரைப்பந்தி. | குதிரைப்பந்தியின்பெயர். மந்திரம்-சாலை. ஆ௳ ௨. |
| (௱அ௪) சூ. நீடியவாரியுஞ்சேவகமுந்தண்டமுங், கூடமுமொளியும் யானைசேர்விடம். | யானைசேர்விடத்தின்பெயர். வாரி-சேவகம்- தண்டம்-கூடம்-ஒளி. ஆ௳ ௫. |
| (௱அ௫) சூ. தண்டம்யானைசெல்வழியென்ப. | யானைசெல்வழியின்பெயர். தண்டம். (௧) |
| (௱அ௬) சூ. சேவகம் யானைத் துயிலிடமாகும். | யானைத்துயிலிடத்தின்பெயர். சேவகம். (௧) |
| (௱அ௭) சூ. கட்சியமளிசேக்கையுறையுள்,சட்டகஞ் சேர் விடம்பள்ளிசயநம்,பட்டம்பாழிபாயலரிதுயிலிட, மொட்டிய வுயர்திணைக்கிடப்பிடமாகும். | மக்கட்கிடப்பிடத்தின்பெயர். கட்சி-அமளி- சேக்கை - உறையுள்-சட்டகம்-சேர்விடம்-பள்ளி-சயநம்-பட்டம்-பாழி-பாயல்-அரி-துயிலிடம். ஆ௳ ௰௩. |
| (௱அ௮) சூ. பட்டம்போத்துப் பண்ணைசேக்கை விலங்கு துயிலு மிடமாகும்மே. | விலங்குதுயிலிடத்தின் பெயர். பட்டம்-போத்து- பண்ணை சேக்கை. ஆ௳ ௪. |

வே

சூத்திரம். | பெயர்ப்பிரிவு.

(௱௮௯) ——

வேதியு நித்தமும் வேள்விக் குண்டம்.

வேள்விக்குண்டத்தின்பெயர்.
வேதி - நித்தம். ஆ௨.

(௱௯௰) சூ.

தாபதம்பாழி கரண்டைபள்ளி, முநிவர்வாசமென மொழியப்படுமே.

முநிவர்வாசத்தின்பெயர்.
தாபதம் - பாழி - கரண்டை - பள்ளி. ஆ௪.

(௱௯௧) சூ.

சுள்ளையுஞ்சூளையு மட்கலஞ் சுடுமிடம்.

மட்கலஞ்சுடுமிடத்தின்பெயர்.
சுள்ளை - சூளை. ஆ௨.

(௱௯௨) சூ.

சுடுகாடீமமயாநஞ்சுடலை, சுடுநிலம்புறங்காடிடுகாடுமுதுகாடு, வநமெரி வநம்பிதிர் வநம்பிணக்காடே.

சுடுகாட்டின்பெயர்.
ஈமம் - மயாநம் - சுடலை - சுடுநிலம் - புறங்காடு - இடுகாடு - முதுகாடு - வநம் - எரிவநம் - பிதிர்வநம் - பிணக்காடு. ஆ௰௧.

(௱௯௩) சூ.

களரிபறந்தலை செம்புலம் படுகளம், பொருகளங் களமெனப்புகன்றனர்புலவர்.

பொருகளத்தின்பெயர்.
களரி - பறந்தலை - செம்புலம் - படுகளம் - களம். ஆ௫.

(௱௯௪) சூ.

அருப்ப மாரிடமஞரிழுக்கு வழுக்குநிலம்.

வழுக்குநிலத்தின்பெயர்.
அருப்பம் - ஆரிடம் - அஞர் - இழுக்கு. ஆ௪.

(௱௯௫) சூ.

தொழுவமாவேலிதோழமாணிலையே.

தொழுவத்தின்பெயர்.
ஆவேலி - தோழம் - ஆணிலை. ஆ௩.

(௱௯௬) சூ.

இஞ்சிநொச்சியெயில்சுற்றுப்புரிசை, பந்தம்வனாப்புக் காப்பரண்காவலாரலோதைபிராகாரம்வேலி, சிர்சாலம் வேணைகைமதிலெனச்செப்புவர்.

மதிலின்பெயர்.
இஞ்சி - நொச்சி - எயில் - சுற்று - புரிசை - பந்தம் - வனாப்பு - காப்பு - அரண் - காவல் - ஆரல் - ஓதை - பிராகாரம் - வேலி - சாலம் - வேணைகை. ௰௬.

(௱௯௭) சூ.

வஞ்சிறையுவளகமாகலும்வனாயார்.] ப

மற்றுமதிலின்பெயர்.
வஞ்சிறை - உவளகம். உ.

ஆ௰௮

சூத்திரம்.

(௱௯௮) ———

பரிகமகப்பாப் பதணமென் றுமுரியமதிலுளுயர்மேடைக்கே.

(௱௯௯) சூ.

தொடையுந்தகைப்பும்வாரியுஞ்சுற்றே.

(௨௱) சூ.

பதப்பாடெந்திரங் கோசந் தோணி, விதப்புஞாயிலுஞ் சின்மதிலுறுப்பே.

(௨௱௧) சூ.

அகழிகிடங்ககப்பாப்பரிகமகழே.

(௨௱௨) சூ.

புகல்குதிராகும்.

(௨௱௩) சூ.

தோட்டிதுவாரம்வாரிகடைவாயில்.

(௨௱௪) சூ.

சிகரிகோபுரம்.

(௨௱௫) சூ.

கோபுரமென்பதுபெருவாயிலாகும்.

(௨௱௬) சூ.

புதவுவாயிற் புகுபெரும் புழையே.

(௨௱௭) சூ.

அளிந்தமவ்வழிச்சார்திண்ணையாகும்.

(௨௱௮) சூ.

அத்திரகம்வாயிற்படிச்சுருளாகும்.

பெயர்ப்பிரிவு.

மதிலுளுயர்மேடையின்பெயர். பரிகம்-அகப்பா-பதணம். ஆ. ௩.

மதிற்சுற்றின்பெயர்.
தொடை- தகைப்பு - வாரி. ஆ. ௩.

மதிலுறுப்பின்பெயர்.
பதப்பாடு எந்திரம்-கோசம்-தோணி-விதப்பு-ஞாயில்-நாஞ்சில். ஆ. ௭.

அகழின்பெயர்.
அகழி-கிடங்கு - அகப்பா-பரிகம். ஆ. ௪.

குதிரின்பெயர்.
புகல். (௧)

வாயிலின்பெயர்.
தோட்டி-துவாரம்-வாரி-கடை. ஆ. ௪.

கோபுரம் - அல்லது கோபுரநிலையின்பெயர்.
சிகரி. (௧)

பெருவாயிலின்பெயர்.
கோபுரம். (௧)

கோபுரவாயிலிற்புகுபுழையின் பெயர்.
புதவு. (௧)

கோபுரவாயிற்றிண்ணையின் பெயர்.
அளிந்தம். (௧)

கோபுரவாயிற்படிச்சுருளின் பெயர்.
அத்திரகம். (௧)

சூத்திரம்.

(௨௱௯) ——

விளையுளும் பண்ணையுஞ் செய்யுங்கழனியுந், தடியும்பாத்தியுஞ்செறுவும்வயலே.

(௨௱௰) சூ.

குண்டில்பாத்திசிறுசெய்யாகும்.

(௨௱௧௧) சூ

குறிஞ்சிநிலச்சார் புங்கொல்லையும்புனமே.

(௨௱௧௨) சூ.

ஏனலும்வளாகமுந்திணைப்புனமென்ப.

(௨௱௧௩) சூ.

முதைப்புனம் பழைங் கொல்லை.

(௨௱௧௪) சூ.

இதைப்புனம்புதுக்கொல்லை.

(௨௱௧௫) சூ.

தோட்டந்துடவைபடப்பையிம்மூன்றுந், தோட்டப்பெயரெனச் சொல்லினர்புலவர்.

(௨௧௬) சூ.

துடவை தொய்யி லுழவின் பெயரே.

(௨௱௧௭) சூ.

தொடுப்பேயுழுவோர்தொழில்வளைப்பாகும்.

(௨௱௧௮) சூ.

மரிசிபுதுவரம்பு.

(௨௱௧௯) சூ.

வன்மீகம்புற்று.

சூ

பெயர்ப்பிரிவு.

வயலின்பெயர்.

விளையுள் - பண்ணை - செய் - கழனி - தடி - பாத்தி - செறு. ஆ ௭.

சிறுசெய்யின்பெயர்.

குண்டில் - பாத்தி. ஆ ௨.

புனத்தின்பெயர்.

குறிஞ்சிநிலச்சார்பு - கொல்லை. ஆ ௨.

திணைப்புனத்தின்பெயர்.

ஏனல் - வளாகம். ஆ ௨.

பழைங்கொல்லையின்பெயர்.

முதைப்புனம். (௧)

புதுக்கொல்லையின்பெயர்.

இதைப்புனம். (௧)

தோட்டத்தின்பெயர்.

தோட்டம் - துடவை - படப்பை. ஆ ௩.

உழவின்பெயர்.

துடவை - தொய்யில். ஆ ௨.

உழுதொழில்வளைப்பின் பெயர்.

தொடுப்பு. (௧)

புதுவரம்பின்பெயர்.

மரிசி. (௧)

புற்றின்பெயர்.

வன்மீகம். (௧)

சூ

சூத்திரம்.

(௨௨௰) ——

கங்குவரம்பருகே.

(௨௨௧) சூ.

உவளகம்பயம்பேயவல் குழிதாழ்வேயிழிவுகிழக்குப்படுகர்பள்ளம்.

(௨௨௨) சூ.

குரும்பிபுற்றஞ்சோறே.

(௨௨௩) சூ.

களரிகரம்பே பெரும்பாழ் முதுநிலம்.

(௨௨௪) சூ.

சரிநெறியொழுக்கந் தாரையாறுவதியதர்மார்க்கமியவை நடவை பதவைசெப்பமயநமிடவை வாரிவட்டைவரிவயவை வகுந்து, செலவுசிறுபதம் வழிக்கிளவியாகும்.

(௨௨௫) சூ.

அத்தங்கடங்கடறுதாம்புசுரமருநெறி.

(௨௨௬) சூ.

கவலைகவர்த்த நெறியெனக் கருதுவர்.

(௨௨௭) சூ.

விடங்கர் சிறுவழி யாகுமென்ப.

(௨௨௮) சூ.

*பாதைபெருவழி.

(௨௨௯) சூ.

படுகர்மடுவிழிந் தேறப்படு நெறி.

ஆ

பெயர்ப்பிரிவு.

வரம்பருகின்பெயர்.

கங்கு. (௧)

பள்ளத்தின்பெயர்

உவளகம் - பயம்பு- அவல்- குழி- தாழ்வு- இழிவு - கிழக்கு- படுகர். ஆ அ.

புற்றஞ்சோற்றின்பெயர்.

குரும்பி. (௧)

முதுநிலத்தின்பெயர்.

களரி-கரம்பு-பெரும்பாழ். ஆ ௩.

வழியின்பெயர்.

சரி-நெறி-ஒழுக்கம்-தாரை ஆறு-வதி-அதர்-மார்க்கம்- இயவை-நடவை-பதவை - செப்பம்-அயநம்-இடவை - வாரி-வட்டை-வரி- வயவை-வகுந்து. செலவு-சிறுபதம். ஆ ௨௧.

அருநெறியின்பெயர்.

அத்தம்-கடம்-கடறு- தாம்பு-சுரம். ஆ ௫.

கவர்த்தநெறியின்பெயர்.

கவலை. (௧)

சிறுவழியின்பெயர்.

விடங்கர். (௧)

பெருவழியின்பெயர்.

பாதை. (௧)

இழிந்தேறப்படுவழியின் பெயர்.

படுகர்-மடு. ஆ ௨.

ஆ

சூத்திரம். | பெயர்ட்பிரிவு.

(உ௩ய) ——

ஆரோகணஞ்சோபாநங்க
ற்படி.

கற்படியின்பெயர்.
ஆரோகணம்- சோபாநம். ஆ உ.

(உ௩க) சூ.
அளக்கர்நீள்வழியே.

நீள்வழியின்பெயர்.
அளக்கர். (க)

(உ௩உ) சூ.
வாய்புலம்பாங்கர் வயின்கள
ம்வைப்புத், தேயம்வழியுழி தி
ணையேமருங்கு, பானிலந் தல
மேவளாகம்பட்டி, சூழநடமி
டப்பெயர்த்தொடர்பே.

இடத்தின்பெயர்.
வாய்-புலம்-பாங்கர்-வயின்-
களம்-வைப்பு - தேயம்-வழி-
உழி-திணை-மருங்கு-பால்-நில
ம்- தலம்-வளாகம்-பட்டி- சூழ
ல்- தாநம். ய அ.

(உ௩௩) சூ.
கண்கால்புறமக முள்ளுழை
கீழ்மேல், பின்சாரயலபுடை
தேவகையெனு அ, முன்னிடை
கடைதலை வலமிடமெனு அ, அ
ன்ன பிறவுமதன்பாலவென்ம
னார்.

மற்றுமிடப்பொதுப்பெயர்.
கண்-கால்-புறம்-அகம்- உ
ள்-உழை-கீழ்-மேல்-பின்-சா
ர்-அயல்-புடை - + தேவகை-
முன்-இடை-கடை-தலை - வல
ம்-இடம். ய௬.

ஆ ௩எ.

(உ௩ச) சூ.
மாடுசிறையுழிமருங்குஞாங்
கர்முன், பால்புடைபாங்கர்பக்
கமாகும்.

பக்கத்தின்பெயர்.
மாடு-சிறை-உழி-மருங்கு-
ஞாங்கர்-முன்- பால் - புடை-
பாங்கர். ஆ ௬.

(உ௩ரு) சூ.
நணந்தலை நாப்பண் மத்திம
நள்ளு, வயங்கிடை யொத்த ஞெ
வோடணவு, நலந்திகழ்கூழையு
நடுவென்றாகும்.

நடுவின்பெயர்.
நணந்தலை-நாப்பண் - மத்தி
மம்-நள்-இடை- ஒத்தல்-நா-
அணவு-கூழை. ஆ ௬.

(உ௩௬) சூ.
உம்பர்மீப்புலம்வலமே *யோ
க்கந், துங்கமுவணம் பருமமுந்
தி, மேடுமோடு தூக்கு மேக்கு,
திவப்பிவையுயர்ச்சியாக நிகழ்
த்துவர்.] ஞா

உயர்ச்சியின்பெயர்.
உம்பர்- மீப்புலம் - வலம்-
ஒக்கம்- துங்கம்- உவணம்- பரு
மம்- உந்தி-மேடு-மோடு- தூக்
கு-மேக்கு- திவப்பு. ஆ ய௩.
ஞா

*ஊக்கம்-என்பதூஉம்பாடம்.] +தேவகை-என்பதுதிசைக்கூறு.

சூத்திரம். | பெயர்ப்பிரிவு.

(௨௩௭) ———
ஞாங்கர்முன்னுமேலுமாகு[ம்.

ஞாங்கரெனும்பெயர்.
முன்னிடத்திற்கு மேலிடத்திற்குமுரித்து.

(௨௩௮) சூ.
முதலுற்தலைத்தாளு முன்னராகும்.

முன்னரின்பெயர்.
முதல்-தலைத்தாள். ஆ௨.

(௨௩௯) சூ.
இம்பரிவனே.

இம்பரெனும்பெயர்.
இவனென்பதற்குரித்து.

(௨௪௰) சூ.
உம்பருவனே.

உம்பரெனும்பெயர்.
உவனென்பதற்குரித்து.

(௨௪௧) சூ.
ஆண்டவ்விடம்.

ஆண்டெனும்பெயர்.
அவ்விடத்திற்குரித்து.

(௨௪௨) சூ.
ஈண்டிவ்விடம்.

ஈண்டெனும்பெயர்.
இவ்விடத்திற்குரித்து.

(௨௪௩) சூ.
எல்லைகுரோசங்கூப்பிடுதூர[ம்.

கூப்பிடுதூரத்தின்பெயர்.
எல்லை-குரோசம். ஆ௨.

(௨௪௪) சூ.
கிரவுஞ் சங்கோழிப் பறவையளவாகும்.

கோழிப்பறவையளவின்பெய[ர்.
கிரவுஞ்சம். (௧)]

(௨௪௫) சூ.
புகையோசனையாம்.

யோசனைதூரத்தின்பெயர்.
புகை. (௧)

(௨௪௬) சூ.
காவதங்காதமாகக்கருதுவர்

காதத்தின்பெயர்.
காவதம். (௧)

திவாகரவரலாற்றின்பெயர்.

ஒருவற்கொருவ னாகியுதவியும், பரிசின்மாக்கள்
பற்பலராயினுந், தானொருவனே தரணிமானவன்
செந்தமிழ்ச் சேந்தன், றெரிந்ததிவாகரத், தைந்தா
வதிடப்பெயர்த்தொகுதி.

முற்றிற்று.

ஆறுவது.

# பல்பொருட்பெயர்த்தொகுதி



(௧) சூ.

ஆடகமாசையீழமேமமா
டுகாணங்கநகந்தமநியம், வெ
றுக்கைசொன்னம்பொருளோ
டரியே,யீகைநிதியேகருந்தந
ங்காஞ்சநம்,பீதகமாடைதொ
டுக்கமருத்தஞ், சாமீகரம்பூரி
சந்திரமாழை, நிதாநந்தேசிக
ஞ் செந்தாதுவித்தந்,திரவியம்
வேங்கைசாம்பூநதமுறை,சாத
ரூபம்முடல்பண்டமிரணியம்,
பொலமென்றின்னவைபொன்
னெனப்படுமே.

(௨) சூ.

பொன்னும்வெள்ளியுஞ்செ
ம்புமிரும்பு, மன்னவீயமுமை
ங்கையுலோகம்.

(௩) சூ.

தாராவொடு கஞ்சந் தானுங்
கூட்டி, யெழுவகையுலோக
மென்னவும்படுமே.

(௪) சூ.

நவமணிகடவுண்மணி யென்
றிவற்றி, னிகழ்பெயர் நிதியுநி
தாநமுமென்ப.

பொன்னின்பெயர்.

ஆடகம்-மாசை-ஈழம்-ஏம
ம்-மாரி-காணம் - கநகம்-தமநி
யம்-வெறுக்கை- சொன்னம்-
பொருள்-அரி-ஈகை - நிதி-தந
ம் - காஞ்சநம் - பீதகம் - மா
டை-தொடுக்கம் - அருத்தம்-
சாமீகரம்-பூரி - சந்திரம் - மா
ழை-நிதாநம்-தேசிகம்- செந்
தாது-வித்தம்-திரவியம் - வே
ங்கை-சாம்பூநதம்-உறை - சா
தரூபம்-உடல்-பண்டம் - இர
ணியம்-பொலம். ஆ ௩௭.

ஐவகையுலோகமாவன.

பொன்-வெள்ளி - செம்பு-
இரும்பு-ஈயம். ஆ ௫.

எழுவகையுலோகமாவன.

ஐவகையோடு- தரா-கஞ்
சம். ௨.

ஆ ௭.

* நவமணியின்பெயர்.

நிதி. (௧)

கடவுண்மணிக்குப்பெயர்.

நிதாநம். (௧)

* நவமணிக்குங்கடவுண்மணிக்கும்பெயர்.
நிதி-நிதாநம். ஆ ௨. எனப்பிரிப்பினுமமையும்.

சூத்திரம்.

(௫) ———

*காணம்பொற்காசே.

(௬) சூ.

மணவுங்காசுமணியின்பொது
ப்பெயர்.

(௭) சூ.

ஆதநஞ்சலாகையகன்மணி
க்காகும்.

(௮) சூ.

மாமணிபதுமராகமாணிக்
கம்.

(௯) சூ.

நித்திலந்தாளமாரமுத்தே.

(௰) சூ.

தாளந்திரட்சி யாகவுஞ்சாற்
றுவர்.

(௧௧) சூ.

வித்துருமந்துகிர் துப்பே
யரத்த, மொத்தபிரவாளந்துவ
ரிவைபவளம்.

(௧௨) சூ.

*அரிபச்சைமரகதமரதகமு
மாகும்.

(௧௩) சூ.

*வச்சிரம்வயிரம்.

(௧௪) சூ.

*வாலவாயம்வைடூரியமே.

(௧௫) சூ.

*மணிநீலமணியே.

(௧௬) சூ.

செங்கை நிதியம்பத்சேந்த
ன்செங்கையிற், சங்கின்வடிவி
னதுசங்கநிதியே.] தே

பெயர்ப்பிரிவு.

பொற்காசின்பெயர்.
காணம். (௧)

மணிப்பொதுப்பெயர்.
மணவு-காசு. ஆ௨.

அகன்மணிப்பொதுப்பெயர்.
ஆதநம்-சலாகை ஆ௨.

மாணிக்கத்தின்பெயர்.
மாமணி-பதுமராகம். ஆ௨.

முத்தின்பெயர்.
நித்திலம்-தாளம்-ஆரம். ஆ௩.

தாளமென்பது.
திரட்சிக்குமுரித்து.

பவளத்தின்பெயர்.
வித்துருமம்-துகிர்-துப்பு-
ஆரத்தம்-பிரவாளம்- துவர். ஆ௬.

மரகதத்தின்பெயர்.
அரி-பச்சை-மரதகம். ஆ௩.

வச்சிரமணியின்பெயர்.
வயிரம். (௧)

வைடூரியத்தின்பெயர்.
வாலவாயம். (௧)

நீலமணியின்பெயர்
மணி. (௧)

சங்கநிதியென்பது.
சங்கின்வடிவினது.

தே

| சூத்திரம். | பெயர்பிரிவு. |
|---|---|
| (௧௭) தேமலரலங்கற்சேந்தன்செங்கையிற்றாமரைவடிவினதுபதுமநிதியே. | பதுமநிதியென்பது. தாமரைவடிவினது. |
| (௧௮) சூ. † பதினாலவகையு நிதியமெனப்படும். | பதினான்குவகையின்பெயர். நிதியம். (௧) |
| (௧௯) சூ. கோசந்தண்டம்பண்டாரமாகும். | பண்டாரத்தின் பெயர். கோசம்-தண்டம். ஆ௨. |
| (௨௰) சூ. இரசதந்தாரங்களதௌதம் வெள்ளி. | வெள்ளியின்பெயர் இரசதம்-தாரம்- களதௌதம். ஆ௩. |
| (௨௧) சூ. கஞ்சம்வெண்கலமாகக்கருதுவர். | வெண்கலத்தின்பெயர். கஞ்சம். (௧) |
| (௨௨) சூ. மாயாபுரியாரகூடம்பித்தளை. | பித்தளையின்பெயர். மாயாபுரி-ஆரகூடம். ஆ௨. |
| (௨௩) சூ. சீருணந்தாம்பிரஞ் சுற்பஞ் செம்பே. | செம்பின்பெயர். சீருணம்- தாம்பிரம் - சுற்பம். ஆ௩. |
| (௨௪) சூ. கருந்தாதுமயமு மிரும்பெனக்கருதுவர். | இரும்பின்பெயர். கருந்தாது-அயம். ஆ௨. |
| (௨௫) சூ. *சத்தியெஃகே. | எஃகின்பெயர். சத்தி. (௧) |
| (௨௬) சூ. வங்கமுஞ்சீருளுமீயமாகும் | ஈயத்தின்பெயர். வங்கம்-சீருள். ஆ௨. |
| (௨௭) சூ. நாகங்காரீயமாகக்கருதுவர். | காரீயத்தின்பெயர். நாகம். (௧) |

† பதினான்குவகையாவன உலோகமைந்து மணியொன்பதுமாம்.

சூத்திரம்.

(௨௮) —

மதுகந் தராவென வைக்கப் படுமே.

(௨௯) சூ.

வலித்திரும்புள்ளேவாங்குங் காந்தஞ், சொலத்தகுஞ் சலாகைசும்பகமென்ப.

(௩௰) சூ.

சந்திரஞெளியிற் றண்ணீர் கான்மணி, சந்திரகாந்தமெனப்பெயர்சாரும்.

(௩௧) சூ.

சூரியஞெளியிற் றீக்கால்சலாகை,சூரியகாந்தமெனப்பெயர்சொல்லும்.

(௩௨) சூ.

படிகம்பளிங்குபருக்கைகாழாகும்.

(௩௩) சூ.

அக்குச்சங்குமணியாகுமென்ப.

(௩௪) சூ.

வட்டிகவடிபலகறைசோகி, வெள்வரியலகென விளம்பவும் படுமே.

(௩௫) சூ.

பண்ணியங்கூலம்வளமேபண்டம், பண்ணிகாரம்பலபண்டப்பெயரே.

(௩௬) சூ.

அரும்பண்டப் பெயர்தாரமென்றாகும்.

பெயர்ப்பிரிவு.

தராவின்பெயர்.

மதுகம். (௧)

இரும்புளவாங்குங்காந்தமணியின்பெயர்.

சலாகை-சும்பகம். ஆ௨

சந்திரஞெளியிற்றண்ணீர்காலுமணியின்பெயர்.

சந்திரகாந்தம். (௧)

சூரியஞெளியிற்றீக்காலுமணியின்பெயர்.

சூரியகாந்தம். (௧)

பளிங்கின்பெயர்.

படிகம்-பருக்கை-காழ். ஆ௩.

சங்குமணியின்பெயர்

அக்கு. (௧)

பலகறையின்பெயர்.

வட்டி-கவடி-சோகி-வெள்வரி-அலகு. ஆ௫.

பலபண்டத்தின்பெயர்.

பண்ணியம்-கூலம்-வளம்-பண்டம்-பண்ணிகாரம். ஆ௫.

அரும்பண்டத்தின்பெயர்.

தாரம். (௧)

சூத்திரம்.

(௩௭) ——

கருப்பூரம்பாளிதம்.

(௩௮) சூ.

கத்தூரிமான்மதம்.

(௩௯) சூ.

மிதங்காலேகம்வட்டிகைபுலியென, நால்வகைச்சாந்திற்குமமாகும்.

(௪௰) சூ.

கலவைச்சேறுங்காலேகவண்ணமுந், தளம்விரைகளபமுஞ் சாந்தின்பொதுப்பெயர்.

(௪௧) சூ.

குங்குமஞ்செஞ்சாந்து.

(௪௨) சூ.

அங்கராகம்பூசுவன

(௪௩) சூ.

தகரமேலங்காசறைமயிர்ச்சாந்தே.

(௪௪) சூ.

தேய்வையுஞ் செச்சையுஞ் செறிகுழம்பாகும்.

(௪௫) சூ.

கொட்டலுஞ் சதுர்த்தலுமப்புதலாகும்.

(௪௬) சூ.

புலர்த்தலும் வரித்தலும் பூசலாகும்.

(௪௭) சூ.

எழுதுகோலான்மகளிராகத்துத் தொழில் பெற வரிப்பது தொய்யிலாகும்.

சு

பெயர்பிரிவு.

கருப்பூரத்தின்பெயர்.

பாளிதம். (௧)

கத்தூரியின்பெயர்.

மான்மதம். (௧)

நால்வகைச்சாந்தின்பெயர்

மிதம்-காலேகம்-வட்டிகை-புலி. ஆ ௪.

சாந்தின்பொதுப்பெயர்

கலவைச்சேறு-காலேகவண்ணம்-தளம்-விரை-களபம். ஆ ௫.

செஞ்சாந்தின்பெயர்.

குங்குமம். (௧)

பூசுவனவற்றின்பெயர்.

அங்கராகம். (௧)

மயிர்ச்சாந்தின்பெயர்.

தகரம்-எலம்-காசறை. ஆ ௩.

செறிகுழம்புஅல்லதுசந்தநக்குழம்பின்பெயர்.

தேய்வை-செச்சை- ஆ ௨.

அப்புதலின்பெயர்

கொட்டல்-சதுர்த்தல். ஆ ௨.

பூசுதலின்பெயர்.

புலர்த்தல்-வரித்தல். ஆ ௨.

மகளிராகத்தெழுதுகோலத்தின்பெயர்.

தொய்யில். (௧)

சு

சூத்திரம்.

(௪௮) ———

சுடிகையுந் திலதமுஞ்சுட்டி யுந்திலகம்.

(௪௯) சூ.

புண்டாந்திலகநுதற்புனைகு றியே.

(௫௰) சூ.

சேலேகஞ்சிந்தூரம்.

(௫௧) சூ.

இங்குலிகஞ்சாதிலிங்கம்.

(௫௨) சூ.

குங்குலுவுங்குக்குலுவுங்குங் கிலியமாகும்.

(௫௩) சூ.

இங்குபெருங்காய மென்றி சைத்தனரே.

(௫௪) சூ.

ஆத்தமுந்துப்பு மரக்கின் பெயரே.

(௫௫) சூ.

சுண்டிசுக்கு.

(௫௬) சூ.

துடியேயேலம்.

(௫௭) சூ.

அதிங்க மட்டியதிமதூர மா கும்.

(௫௮) சூ.

சாமரைகவரிசவரிசீகரம்.

(௫௯) சூ.

அறுகுவெள்ளரிசி கூட்டிய தச்சுதம்.

கொ

பெயர்ப்பிரிவு.

திலகத்தின்பெயர்
சுடிகை-திலதம்-சுட்டி. ஆ ௩.

நுதற்புனைகுறியின்பெயர்.
புண்டாம்-திலகம். ஆ ௨.

சிந்தூரத்தின்பெயர்
சேலேகம். (க)

சாதிலிங்கத்தின்பெயர்
இங்குலிகம். (க)

குங்குலியத்தின்பெயர்.
குங்குலு-குக்குலு. ஆ ௨.

பெருங்காயத்தின்பெயர்
இங்கு. (க)

அரக்கின்பெயர்.
ஆத்தம்-துப்பு. ஆ ௨.

சுக்கின்பெயர்.
சுண்டி. (க)

ஏலத்தின்பெயர்.
துடி. (க)

அதிமதூரத்தின்பெயர்.
அதிங்கம்-அட்டி. ஆ ௨.

சாமரையின்பெயர்.
கவரி-சவரி-சீகரம். ஆ ௩.

அச்சுதமென்பது.
அறுகும்வெள்ளரிசியுங்கூட் டியது.

கொ

சூத்திரம்.

(௬௰) ——
கொள்கலமொன்றிற் குறுணியாகப், பல்லுணவுபெய்து பாரிப்பதுபிரப்பே.

(௬௧) சூ.
இந்தநங்காட்டத் துவரிவை விறகே.

(௬௨) சூ.
சமிதையோமவிறகெனச்சாற்றுவர்.

(௬௩) சூ.
ஞெகிழிகொள்ளி நெருப்புறுவிறகாம்.

(௬௪) சூ.
முளரியலாதமுற் கங்கடைக்கொள்ளி.

(௬௫) சூ.
கந்துளுமிருந்தையுங்கரியெனக்கூறுவர்.

(௬௬) சூ.
அடலைவெண்பலி சாம்பராகும்.

(௬௭) சூ.
*காப்பும்பொடியும்பற்பமும்விபூதியுந், திருநீறதனைச்செப்புங்கிளவி.

(௬௮) சூ.
*சாணிபுண்ணிய சாந்தமெனப்படும்.

(௬௯) சூ.
சுதையுங்களபமுஞ் சுடுசுண்ணச்சாந்தே.

தா

பெயர்பிரிவு.

பிரப்பென்பது.
குறுணியொவ்வொன்றதாகக்கொள்கலத்துட் பல்லுணக்கள்பரப்பிவைப்பது.

விறகின்பெயர்.
இந்தநம்-காட்டம்-துவர். ஆ ௩.

ஓமவிறகின்பெயர்.
சமிதை. (௧)

நெருப்புறுவிறகின்பெயர்.
ஞெகிழி-கொள்ளி. ஆ ௨.

கடைக்கொள்ளியின்பெயர்.
முளரி-அலாதம்-உற்கம். ஆ ௩.

கரியின்பெயர்.
கந்துள்-இருந்தை. ஆ ௨.

சாம்பரின்பெயர்.
அடலை-வெண்பலி. ஆ ௨.

திருநீற்றின்பெயர்.
காப்பு-பொடி-பற்பம்-விபூதி. ஆ ௪.

சாணியின்பெயர்.
புண்ணியசாந்தம். (௧)

சுடுசுண்ணச்சாந்தின்பெயர்.
சுதை-களபம். ஆ ௨.

தா

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (எ0) —— தூமமு மரியுந் தூபமும் புகையே. | புகையின்பெயர். தூமம்-அரி-தூபம். ஆ ௩. |
| (எக) சூ. குருஉப்புகைநறைபடு கொழும்புகையாகும். | மணப்புகையின்பெயர். குருஉப்புகை. (க) |
| (எஉ) சூ. *இமசலஞ் சீதநீர் பனிநீர்க்கெய்தும். | பனிநீரின்பெயர். இமசலம்-சீதநீர். ஆ உ. |
| (எ௩) சூ. பிதிர்சிதர்பராகந் தகர் சின்ன பின்னந், துகளுநீறுஞ்சுண்ணமுந்தாதும்,பொடியின்பெயரோபுழுதியுமாகும். | பொடியின்பெயர். பிதிர்-சிதர்-பராகம்-சின்ன பின்னம்-துகள்-நீறு-சுண்ணம்-தாது-புழுதி. ஆ ௯. |
| (எச) சூ. *காவிக்கல்செங்கல்கைரிகந்தாது. | காவிக்கல்லின்பெயர். செங்கல்-கைரிகம்-தாது. ஆ ௩. |
| (எரு) சூ. கழிப்புறு குறுமலங் காட்டமெனப்படும். | கழிப்புறுகுறுமலத்தின்பெயர் காட்டம். (க) |
| (எசா) சூ. இலவின்பஞ்சின் பெயர்பூளையாகும். | இலவின்பஞ்சின்பெயர். பூளை. (க) |
| (எஎ) சூ. கார்ப்பாசம்பரி பன்னல்பருத்தி. | பருத்திப்பஞ்சின்பெயர். கார்ப்பாசம்-பரி- பன்னல். ஆ ௩. |
| (எஅ) சூ. துய்யேபஞ்சிற் றொடர்நுனியாகும். | பஞ்சினுனியின்பெயர். துய். (க) |
| (எகூ) சூ. புன்கமிதவைபொம்மல்போநக,மந்நமோதநமயினியடிசில், பாளிதம்பொருகுயிசைபதம் | சோற்றின்பெயர். புன்கம்-மிதவை-பொம்மல் போநகம்-அந்நம் - ஓதநம்-அயினி- அடிசில் - பாளிதம்-பொ |

| சூத்திரம். | பெயர்பிரிவு. |
|---|---|
| ம்பால்புகா, வமலையுணவுதுப் பசநங்கவளஞ், சொன்றி திமிர ன்மடைகூழ்புழுக்க , லொன் றிய மூரல் சோறென வுரைப் பர். | பொருகு-மிசை-பதம்-பால்-புகா-அமலை-உணவு- துப்பு-அசநம்-கவளம்- சொன்றி-திமிரல் - மடை-கூழ்-புழுக்கல் மூரல். ஆ௨௫. |
| (அ௰) சூ. *பொதிசோறாற்றுணத்தோட்கோப்பாகும். | பொதிசோற்றின்பெயர். ஆற்றுணா-தோட்கோப்பு. ஆ௨. |
| (அ௧) சூ. உண்டிபதம்வல்சியுணாமிசைதல்பக்கித்தலயின்றனுங்கல்விழுங்கறுய்த்தன், மேயதலயிறனுகர்தலருந்த,லுண்டறின்றல் பருகுத லென்றிவை, பண்பிற்றொழிலைப்பகருங்கிளவி. | உண்டொழிலின்பெயர். உண்டி-பதம்-வலசி-உணா-மிசைதல்--பக்கித்தல்- அயின்றல்-நுங்கல்-விழுங்கல்- துய்த்தல்-மேய்தல்-அயிறல் - நுகர்தல்-அருந்தல்-உண்டல் - தின்றல்-பருகுதல். ஆ௰௭. |
| (அ௨) சூ. கூழெனும்பெயரொப் பொருளிற்குமாகும். | கூழெனும்பெயர். ஏப்பொருளிற்குமுரித்து. |
| (அ௩) சூ. அடப்படுவதடிசில் | அடிசிலென்பது. அடப்படுவதற்குரித்து. |
| (அ௪) சூ. புழுக்குவதுபுழுங்கல். | புழுங்கலென்பது. புழுக்குவதற்குரித்து. |
| (அ௫) சூ. அமிழ்துமவியுந்தெய்வவுணவே. | தெய்வவுணவின்பெயர். அமிழ்து-அவி ௨. |
| (அ௬) சூ. பலியுஞ்சருவுமப் பெயர்ப் பால. | மற்றுந்தெய்வவுணவின்பெயர் பலி-சரு ௨. ஆ௪. |
| (அ௭) சூ. கருனைபதனமைத்துப்பொரிக்குஞ்சிற்றுணவு. | பொரிக்கறியின்பெயர். கருனை. ர் (௧) |
| (அ௮) சூ. ஆவிவெந்தைபிட்டு. | பிட்டின்பெயர். ஆவி-வெந்தை. ஆ௨. |

சூத்திரம்.

(அகூ) ———

அஃகுல்லியுக்காரி.

(கூ௰) சூ.

மோதகமிலட்டுகம்.

(கூக) சூ.

பில்லடைசஃகுல்லி.

(கூஉ) சூ.

பூரிகநொலையல்கஞ்சந்தோசை, பேதவகைப் பெயரப்பமாகும்.

(கூ௩) சூ.

நுவணையுமிடியுந் தினைநுண்பிண்டி.

(கூச) சூ.

அப்பம்பிட்டோடஃகுல்லியிடியெனச்,செப்பியவெல்லாஞ்சிற்றுண்டியாகும்.

(கூரு) சூ.

வறையலோச்சை.

(கூசு) சூ.

மலாவகம்பிண்ணாக்கே.

(கூஎ) சூ.

துவையேகூட்டமைத்தடுந்தொடர்பிறவும், புருகுவனவவையேபுளிங்கறியாகும்.

(கூஅ) சூ.

*கறிநீடாணம்.

(கூகூ) சூ.

பாகேகுழம்பு.

(௱) சூ.

கஞ்சிகாடிமோழை.

(௱க) சூ.

ததியுமளையுந்தயிரெனமொழிப.

ப

பெயர்ப்பிரிவு.

உக்காரியின்பெயர்.

அஃகுல்லி. (க)

மோதகத்தின்பெயர்.

இலட்டுகம். (க)

பில்லடையின்பெயர்.

சஃகுல்லி. (க)

அப்பவர்க்கத்தின்பெயர்.

பூரிகம் - நொலையல் - கஞ்சம்-தோசை. ஆகச.

தினைமாவின்பெயர்.

நுவணை - இடி. ஆகஉ.

சிற்றுண்டியெனும்பெயர்.

அப்பம்-பிட்டு - அஃகுல்லி- இடி - முதலியவெல்லாவற்றிற்குமுரித்து.

வறையலின்பெயர்.

ஓச்சை. (க)

பிண்ணாக்கின்பெயர்.

மலாவகம். (க)

புளிங்கறியின்பெயர்.

துவை. (க)

கறியின்பெயர்.

நீடாணம். (க)

குழம்பின்பெயர்.

பாகு. (க)

கஞ்சியின்பெயர்.

காடி-மோழை. ஆகஉ.

தயிரின்பெயர்.

ததி- அளை. ஆகஉ.

ப

சூத்திரம்.

(௱உ) ——

பயமுஞ்சீரு மமுதமும்பா

(௱௩) சூ. [லே.

இழுதுங்கிருதமுந்துப்புநெ
ய்யே.

(௱௪) சூ.

ஆச்சிய மென்று மதன் பெ
யராகும்.

(௱௫) சூ.

மூசரோ தக்கிர மோரென்று
கும்.

(௱௬) சூ.

ஐயங்கவீந நவநீதம் வெண்
ணெய்

(௱௭) சூ.

பிரசமும துவுந்தேனெனப்

(௱௮) சூ. [பேசுவர்.

கட்டியும்விசயமுங் குளமுங்
கன்னலு, மொட்டியபாகுமக்
காரமுஞ் சருக்கரை.

(௱௯) சூ.

கண்டம்பாளிதங் கண்டசரு
க்கரை.

(௱௰) சூ.

உண்டையயிர்புல்லகண்ட
மொருவிகற்பம்.

(௱௰௧) சூ.

இக்குநனை தேன்முருகுதொ
ப்பி,நறவுபிரசந் தணியல்சுரை
படு,வேரிமட்டுத் தேறல்சாறு,
பாநம் வடிபிழி மதுவழி தொ
ண்டி,யானவரிட்டமுஞ் சாதியு
ங்கள்ளாம்.

அ

பெயர்ப்பிரிவு.

பாலின்பெயர்.

பயம்-சீரம்-அமுதம். ஆ ௩.

நெய்யின்பெயர்.

இழுது-கிருதம்-துப்பு.
ஆ ௩.

மற்றுநெய்யின்பெயர்.

ஆச்சியம். (க)
ஆ ௪.

மோரின்பெயர்.

மூசர்-தக்கிரம். ஆ உ.

வெண்ணெய்யின்பெயர்.

ஐயங்கவீநம்-நவநீதம்.
ஆ உ.

தேனின்பெயர்.

பிரசம்-மது. ஆ உ.

சருக்கரையின்பெயர்.

கட்டி-விசயம்-குளம்- கன்
னல்-பாகு-அக்காரம். ஆ ௬.

கண்டசருக்கரையின்பெயர்.

கண்டம்-பாளிதம். உ.

மற்றுங்கண்டசருக்கரையின்
பெயர்.

உண்டை-அயிர்-புல்லகண்ட
ம். ௩.] — ஆ ௫.

கள்ளின்பெயர்.

இக்கு-நனை-தேன்-முருகு-
தொப்பி-நறவு-பிரசம்- தணி
யல்-சுரை-படு-வேரி - மட்டு-
தேறல்-சாறு-பாநம்- வடி-பி
ழி-மது-வழி-தொண்டி - அரி
ட்டம்-சாதி. உஉ.

அ

சூத்திரம்.

(௱௪௨)

அருகிக்கௌவையும் விளம்பியுமாகும்.

(௱௪௩) சூ.

பாலிசுமாலி யாலி மருட்டம், மாலிமுண்டகஞ்சாலிமாரி, பாடலி மௌலி சிக்கர்ஞாளி, பாணிகுந்திமதுகரஞ்சுவிகை, யாசவமாம் பலம்பியம்பதை, மேதைகஞ்சாவிகுணிசுலோகி, பேந வகைக் கட்பெயரென வறைவர்.

(௱௪௪) சூ.

பாநம்பருகுவன வெவற்றிற்கும்பெயரே.

(௱௪௫) சூ.

அமிழ்தின்பெயரேமருந்தெனலாகும்.

(௱௪௬) சூ.

ஆலங்காரிகடுவிடநஞ்சே.

(௱௪௭) சூ.

துற்றியுண்பன.

(௱௪௮) சூ.

திற்றிதின்பன.

(௱௪௯) சூ.

இலைநுகர்விலங்கி னுணவுகுளகென்ப,

(௱௫௰) சூ.

பறவைக்குமொருசார்விலங்கிற்கும்முணவிரையுமுண்டியுமெனப்பெயர்பெறுமே.

மி

பெயர்ப்பிரிவு.

மற்றுங்கள்ளின்பெயர்.

கௌவை- விளம்பி. ௨.

மற்றுங்கள்ளின்பெயர்.

பாலி-சுமாலி-ஆலி- மருட்டம்-மாலி-முண்டகம்-சாலி-மாரி-பாடலி-மௌலி-சிக்கர்-ஞாளி-பாணி- குந்தி - மதுகரம்-சுவிகை-ஆசவம் - ஆம்பல்-அம்பி - அம்பதை -மேதை -கஞ்சா-விகுணி-சுலோகி. ௨௪.

ஆ௨௪.

பாநமென்பது.

பருகுவனவெவற்றிற்குமாம்.

அமிழ்தின்பெயர்.

மருந்து. (௧)

நஞ்சின்பெயர்.

ஆலம்-காரி-கடு-விடம்.

ஆ௪.

உண்பனவற்றின்பெயர்.

துற்றி. (௧)

தின்பனவற்றின்பெயர்

திற்றி. (௧)

இலைநுகர்விலங்கி னுணவின் பெயர்.

குளகு. (௧)

பறவையுணவிற்குமொருசார் விலங்கி னுணவிற்கும்பெயர்.

இரை-உண்டி. ஆ௨.

மி

| சூத்திரம். | பெயர்ப்பிரிவு. |
|---|---|
| (௱௨௧) —— மிச்சிலெச்சிலுச்சிட்டமொழிபொருள். | ஒழிபொருளின்பெயர். மிச்சில்-எச்சில்-உச்சிட்டம். ஆ ௩. |
| (௱௨௨) சூ. துப்பேசாதநந் துணைக்காரணமாம். | துணைக்காரணத்தின்பெயர். துப்பு-சாதநம். ௨. |
| (௱௨௩) சூ. ஒக்குமதற்கேயுபகரணப்பெயரே. | மற்றுந்துணைக்காரணத்தின் பெயர். உபகரணம். (௧) ஆ ௩. |
| (௱௨௪) சூ. உபயமுமுகளமுமோரிரண்டாகும். | இரண்டின்பெயர். உபயம்-உகளம். ஆ ௨. |
| (௱௨௫) சூ. வெண்டேர் கானல் பேய்த்தேராகும. | பேய்த்தேரின்பெயர். வெண்டேர்-கானல். ஆ ௨. |
| (௱௨௬) சூ. துணையறைதூக்கஞ்சல்லியாகும். | சல்லியின்பெயர். துணை-அறை-தூக்கம். ஆ ௩. |
| (௱௨௭) சூ. மகிழின்பரலு நெல்லின்மணியு, மணையவையலகெனும் பெயரவாகும். | அலகெனும்பெயர் மகிழின்பரற்கு நென்மணிக்குமுரித்து. |
| (௱௨௮) சூ. ஒளியும்பந்தியு மொழுங்கு நிரையாகும். | நிரையின்பெயர். ஒளி-பந்தி-ஒழுங்கு. ஆ ௩. |

திவாகரவரலாறு.

வருநற்கங்கைவடதிசைப்பெருமையுந், தென்றிசைச்சிறுமையுநீக்கிய குறுமுநி, குண்டிகைப்பழம்புனற்காவிரிப்பெரும்பதி, யம்பற்கதிபதிசேந்தன்றிவாகரத், தாருவதுபல்பொருட்பெயர்த்தொகுதி

முற்றிற்று.

